21/5

"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला–५








# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–५



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 5

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1962



॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥




பக்கம்



---

# ப ீப்புரை

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் அனுக்ரஹத்தினுல் அமைக்கப்பட்ட அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் முக்கிய நோக்கம் ஸ்ரீ பகவத்பாதாளின் க்ரந்தங்களை அநுவாதத்துடன் பிரசுரித்து குறைந்த விலையில் எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்து ஆசார்யாளுடைய உபதேசங்களை எங்கும் பரவச்செய்வதே. இந்நோக்கத்துடன் பிரசுரிக்கப்படும் "ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா"வின் ஐந்தாவது வெளியீடு இது.

இதில் கீழிருந்து கிரமமாக மேலான பரப்ரஹ்ம நிலையை அடைவதற்கு 40 படிகளை 'உபதேச பஞ்சக'த்திலும், ப்ரஹ்ம ஸ்வரூபத்தை தியானிக்கும் முறையை 'ப்ரஹ்மாநுசிந்தன'த்திலும், 'அத்வைத பஞ்சரத்ன'த்தில் ஆத்மஸ்வரூபத்தைப் பரிசோதித்தும், அது ஸ்வயம்பிரகாச வஸ்து என்பதை 'ஏக சுலோக' பிரகரணத்திலும், இந்த ஆத்மஸ்வரூபத்தை மறைக்கும் மாயையின் லீலைகளை 'மாயா பஞ்சக'த்திலும், இந்த மாயையைத் தாண்டிய ஞானிகளின் அனுபவத்தை 'மனீஷா பஞ்சக'த்திலும், இந்த ஆத்மானுபவம் பெற்ற மஹான்களின் மஹாபாக்யத்தை 'யதி பஞ்சகத்'திலும் ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாள் நன்கு காட்டி உபதேசித்திருக்கிறார்கள்.

இவைகள் தமிழ் அநுவாதத்துடனும் விரிவுரையுடனும் யாவருக்கும் உபயோகப்படும் வகையில் ஸமிதியால் வெளியிடப்பட்டிருக்கிறது.

இதைப் படிப்பதன்மூலம் ஸ்ரீ பகவத்பாதாளுடைய உபதேசங்களை மனதில் பதியவைத்து அனுபவத்தில் கைக்கொண்டு சிரேயஸ்ஸையடையக் கோருகிறேன்.

**K. V. சுப்பரத்னம் அய்யர்,**
பொதுக் காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

உ

॥ श्रीः ॥

# ॥ उपदेशपञ्चकम् ॥

## உபதேச பஞ்சகம்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.

[ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாகிய பகவான் காலடியில் ஸ்ரீசங்கரராக அவதரித்து. ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரிடம் உபதேசம் பெற்று ஸூத்ரபாஷ்யம் முதலான உயர்ந்த பல கிரந்தங்களை இயற்றி எங்கும் ஸஞ்சாரம் செய்து ஔபநிஷதமான அத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபித்து. அவதார கார்யம் பூர்த்தியானதும் கைலாஸத்திற்குப் புறப்படும் ஸமயம், சில சிஷ்யர்கள் 'ஸூத்ரபாஷ்யம் முதலான கிரந்தங்களை வாசித்துத் தெரிந்துகொள்ள புத்தி ஸாமர்த்தியமில்லாத ஸாமான்ய அதிகாரிகளும் சிரேயஸ்ஸை அடைய மார்கத்தை உபதேசித்து அருளவேண்டும்' என்று பிரார்த்திக்கவே அப்பொழுது இந்த ஐந்து சுலோகங்களையும் உபதேசித்தார்.* இதிலுள்ள ஒவ்வொரு சுலோகமும் குரு சிஷ்யனுக்குச் செய்யும் உயர்ந்த உபதேச ரூபமாக அமைந்திருப்பதால் இதை 'உபதேச பஞ்சகம்' என்றும், 'பஞ்சரத்னம்' என்றும் சொல்வது உண்டு. மேலும் வேதாத்யயனம் செய்ய ஆரம்பிப்பது முதல் பரப்ரஹ்மநிலையை அடைவது வரை மனிதனைக் கீழிருந்து படிப்படியாக மேலே அழைத்துச்செல்வதால் 'ஸோபான பஞ்சகம்' என்றும் கூறுகிறார்கள். நன்கு கவனித்துப் பார்த்தோமானால் ஒவ்வொரு சுலோகத்திலும் எட்டு உபதேசங்கள் அமைந்திருக்கின்றன. ஆகவே நாற்பது உபதேசங்கள் கொண்டது இச்சிறியநூல். அதாவது மோக்ஷம் என்னும் ப்ராஸாதத்தைச் சுலபமாக அடைவதற்கு 40 படிக்கட்டுகளை கட்டிக் கொடுத்திருக்கிறார்

---

* இவ்விஷயம் ஸ்ரீ ராமேந்த்ர ஸ்வாமிகளின் சிஷ்யர் ஸ்ரீஸதாசிவர் இயற்றிய "பஞ்சரத்னகாரிகா" என்னும் வியாக்யானத்தில் காணப்படுகிறது. இது ஸ்ரீ சங்கர குருகுல பத்ரிகையில் வெளியிடப்பட்டு தனியாகவும் கிடைக்கும். விலை ரூ. 1|-

ஸ்ரீ பகவத்பாதர். உபநயனம் ஆனபிறகுதான் வேதத்தில் அதிகாரியாகிறுன். இந்த நிலையிலிருந்து ஒரு மனிதன் எந்த எந்த ஸாதனங்களை கைக்கொண்டு படிப்படியாக முன்னேறி ப்ரஹ்மானந்த நிலையை அடைகிறுன் என்பதை இந்த கிரந்தத்தில் காணலாம். பின்வரும் முறையில் கிரமமாக ஸோபானங்கள் அமைந்திருக்கின்றன. அத்யயனம், நிஷித்த காமிய த்யாகம், கர்மயோகம், சித்தசுத்தி, வைராக்யம், முமுக்ஷுத்வம், ஸந்யாஸம், ஸத்ஸங்கம் ஈசுவரபக்தி, சமாதிஷட்கம், குரு அபிகமம், குரு ஸேவா, பிரணவஜபம், சிரவணம், மனனம், நிதித்யாஸனம், அஹங்கார—மமகாரத்யாகம், மௌனம், ஜீவன்முக்தசர்யை, விதேஹமுக்தி இவை பின்வரும் சுலோகங்களில் முறையாக விளக்கப்பட்டுள்ளன.]

(அ) முதல் சுலோகத்தில் ப்ரஹ்மசாரி, கிருஹஸ்தன், வானப்ரஸ்தன் இவர்களின் (ஞானஸாதனமான) தர்மங்களைக் கூறி முடிவில் ஸந்யாஸத்தையும் காட்டுகிறுர்:—

**वेदो नित्यमधीयतां तदुदितं कर्म स्वनुष्ठीयतां**
**तेनेशस्य विधीयतामपचितिः काम्ये मतिस्त्यज्यताम् ।**
**पापौघः परिधूयतां भवसुखे दोषोऽनुसन्धीयतां**
**आत्मेच्छा व्यवसीयतां निजगृहात्तूर्णं विनिर्गम्यताम् ॥ १ ॥**

வேதோ நித்யமதீயதாம் ததுதிதம் கர்ம ஸ்வநுஷ்டீயதாம்
தேநேஶஸ்ய விதீயதாமபசிதி: காம்யே மதிஸ்த்யஜ்யதாம் ।
பாபௌக:பரிதூயதாம் பவஸுகே தோஷோऽனுஸந்தீயதாம்
ஆத்மேச்சா வ்யவஸீயதாம் நிஜக்ருஹாத் தூர்ணம்
விநிர்கம்யதாம் ॥

**वेदः**–வேதமானது, **नित्यं**–தினந்தோறும், **अधीयतां**–அத்யயனம் செய்யப்படவேண்டும். **तदुदितं**–அதில் கூறப்பட்ட **कर्म**–நித்யநைமித்திக கர்மாவானது, **स्वनुष्ठीयतां**–நன்கு அனுஷ்டிக்கப்படவேண்டும். **तेन**-அந்தக் கர்மாவால், **ईशस्य**-ஈசுவரனுக்கு, **अपचितिः**–பூஜை, **विधीयतां**–செய்யப்படவேண்டும். **काम्ये**–காம்யமான (பலனைத்தரும்) கர்மாவில்

**मतिः**–எண்ணம், **त्यज्यतां**–விடப்படவேண்டும். **पापौघः**–பாவக்குவியல், **परिधूयतां** – நன்கு உதறப்படவேண்டும். **भवसुखे** – ஸம்ஸாரஸுகத்தில், **दोषः**–தோஷமானது, **अनुसन्धीयतां** - ஞாபகப்படுத்தப்படவேண்டும். **आत्मेच्छा** – ஆத்மவிஷயமான இச்சை, **व्यवसीयतां** – உறுதியாக்கப் படவேண்டும். **निजगृहात्** – தன் வீட்டிலிருந்து, **तूर्णं**-விரைவில், **विनिर्गम्यतां**–வெளிக்கிளம்பவேண்டும்.

முதல் சுலோகத்தில் எட்டு உபதேசங்கள் இருக்கின்றன. தினமும் வேதாத்யயனம் செய்யவேண்டும் என்பது முதல் உபதேசம். உபநயனத்திற்குப்பின் என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். உபநயனத்திற்கு முன் மனிதனுக்கு ஒருவிதக் கட்டுப்பாடும் இல்லை '**प्रागुपनयनात् कामचारः कामवादः कामभक्षः**' (ப்ராக் உபநயநாத் காமசார: காமவாத: காமபக்ஷ:) உபநயனத்திற்கு முன் இஷ்டப்படி எங்கும் செல்லலாம். இஷ்டப்படி பேசலாம் இஷ்டப்படி சாப்பிடலாம். உபநயநமானதும் சாஸ்திரக் கட்டுப்பாட்டுக்கு உட்படுகிறான். ப்ரஹ்மசாரிக்கு முக்யமான தர்மம் வேதாத்யயனம். இதற்காகவே ப்ரஹ்மசர்யாச்ரமம் ஏற்பட்டிருக்கிறது. முதல் உபதேசத்தால் ப்ரஹ்மசாரி தர்மம் கூறப்பட்டது. இது சிரேயோ மார்க்கத்திற்கு முதல்படி. வேதாத்யயனம் எதற்காக என்ற கேள்விக்கு தர்மாதர்மங்களைத் தெரிந்துகொள்வதற்காக என்பதுதான் சரியான பதில். திருஷ்டமான பலன் இருக்கும்பொழுது அத்ருஷ்டத்தைமட்டும் பலனாகக் கூறுவது ந்யாயம் அல்ல. தர்மாதர்மங்களைத் தெரிந்துகொண்டால்தான் தர்மத்தை அனுஷ்டிக்கவும் அதர்மத்தை விலக்கவும் முடியும். தர்மாதர்மங்களைத் தெரிந்துகொள்வதற்கு வேதத்தின் அர்த்தத்தையும் தெரிந்துகொள்ளவேண்டும். வெறும் வேதாத்யயனத்தால் அதிருஷ்டம் ஏற்பட்டாலும் முக்ய பிரயோஜனமான தர்ம அதர்மஞானம் ஏற்படாது. அதனால்தான் அத்யயனம் என்ற பதத்திற்கே அர்த்தஞானத்துடன்

அத்யயனம் செய்யவேண்டும் என்று பொருள் கூறியிருக்கிறார்கள். வேதத்தின் அர்த்தம் தெரிந்தால்தான் தர்மா தர்மங்களை அறிந்துகொள்ளமுடியும். இது தர்மம், இது அதர்மம் என்பதை வேதத்தைத் தவிர வேறு ஒரு பிரமாணத்தாலும் அறிந்துகொள்ளமுடியாது. श्रोतव्यः श्रुति-वाक्येभ्यः (ச்ரோதவ்ய: ச்ருதிவாக்யேப்ய: – உபநிஷத் வாக்யங்கள் மூலம் ப்ரஹ்மவிசாரம் செய்யவேண்டும்) என்று கூறியிருப்பதால் ப்ரஹ்மஞானத்திற்கும் வேதாத்யயனம் வேண்டும். ஆகவே வேதத்தை அத்யயனம் செய்வதுடன் அங்கங்களையும் வாசித்து வேதார்த்தத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும். இவன்தான் முதல் படியில் ஏறிவிடுகிறான். கிருஹஸ்தன் தினமும் செய்யும் பிரஹ்மயக்ஞத்தையும் இங்கு எடுத்துக்கொள்ளலாம்.

அர்த்தஞானத்துடன் ஸாங்க வேதாத்யயனம் செய்த பிறகு கிருஹஸ்தாச்ரமத்தை அடைந்து வேதத்தில் கூறப்பட்ட ஸ்வதர்மங்களை அனுஷ்டிக்கவேண்டும். ஆத்மஞானம் ஏற்பட சித்தம் பரிசுத்தமாக இருக்கவேண்டும். பாபத்தால் ஏற்படும் தோஷங்கள் விலகினால்தான் சித்தம் பரிசுத்தம் ஆகும். பாபம் நீங்க ஸ்வதர்மங்களைத் தவறாது அனுஷ்டித்து வரவேண்டும். நிஷித்தமான கர்மாக்களைச் செய்யக்கூடாது என்று சாஸ்திரமே தடுத்துவிட்டது. காம்யகர்மாவைச் செய்யக்கூடாது என்று பின்னால் உபதேசிக்கிறார். ஆகையால் தனக்கு ஏற்பட்ட நித்யகர்மாவையும் நைமித்திக கர்மாவையும் மட்டும் அனுஷ்டிக்கவேண்டும். இங்கு स्वनुष्ठीयतां (ஸ்வனுஷ்டீயதாம் நன்கு அனுஷ்டிக்கவேண்டும்) என்று கூறியிருப்பதால் பலனைக் கொஞ்சமும் எதிர்பாராமல் கடமை என்ற எண்ணத்துடன் செய்யவேண்டும் என்று கிடைக்கிறது. அப்பொழுதுதான் வயலில் களைஎடுப்பது போல் சித்தத்திலுள்ள காமம் முதலான தோஷங்கள் நீங்கும்.

இதையே கொஞ்சம் விளக்கி கர்மா செய்யவேண்டிய முறையை அடுத்தபடி உபதேசிக்கிறார். ஸ்வதர்மானுஷ்

டானத்தாலேயே ஈசுவரனை பூஜிக்கவேண்டும். '**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः**' (ஸ்வகர்மணு தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ:) என்பது கீதாவசனம். பூஜை என்பது ப்ரீதியை உண்டுபண்டும் காரியம். நம்மிடம் ப்ரீதி ஏற்படுவதற்காக பெரியவர்களை பூஜிக்கிறோம். ஈசுவரனுக்கு ப்ரீதியைக்கொடுக்கும் காரியம் அவர் கட்டளையிட்டிருக்கும் ஸ்வதர்மங்களை அனுஷ்டிப்பதுதான். அதிலும் 'நான் செய்கிறேன்' என்ற அஹங்காரமில்லாமல், பலனையும் விரும்பாமல் ஸ்வதர்மத்தை அனுஷ்டித்து ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவருக்கு நம்மிடம் ப்ரீதி ஏற்படும். அவர் ஆக்ஞையை மீறி ஸ்வதர்மத்தை விட்டு தன் இஷ்டப்படி கார்யங்களைச் செய்தால் ஈசுவரனுக்குக்கோபம்தான் உண்டாகும். ஈசுவரானுக்ரஹம் இருந்தால்தான் சிரமமில்லாமல் ஞான மார்க்கத்தில் செல்லமுடியும்.

லௌகிக விஷயங்களையும் போகத்தையும் அடைவதற்கு உபாயமாகக் கூறப்பட்ட கர்மாக்கள் காம்யம் எனப்படும். இவைகளைச்செய்யும் எண்ணமே மனதில் ஏற்படக்கூடாது. இந்த கர்மாக்களை முறைப்படி சிறிதும் வழுவாது நடத்தினுல் தான் கோரிய பலன் கிடைக்கும். இப்படிச்செய்வதே மிக்க சிரமம். செய்தாலும் கிடைக்கும் பலன் அல்பமாயும் துக்கம் கலந்ததாகவும் இருக்கும். நிலையாகவும் இருக்காது. ஆசையை மேலும் மேலும் வளர்த்து தாபத்தை உண்டு பண்ணும். சாஸ்திரத்தில் கூறப்பட்ட காம்யகர்மாக்களையே செய்யக்கூடாது என்று சொல்லும்பொழுது அதே காரணத்திற்காக ஆசை நிறைவேற லௌகிகமான கார்யங்களை முமுக்ஷு ஆரம்பிக்கக்கூடாது என்பது தானுகவே கிடைக்கிறது.

இவ்வாறு நிஷித்த கர்மாவையும் காம்ய கர்மாவையும் விலக்கி, பலனையும் விரும்பாமல் ஈசுவரார்பணபுத்தியுடன் நித்யநைமித்திக கர்மாக்களை மட்டும் தவருமல் செய்து

வந்தால் ஞானம் ஏற்பட இடைஞ்சலாக உள்ள பாபங்கள் எல்லாம் விலகி மனம் பரிசுத்தமாகும். பாபம் சிறிதுகூட நம்மிடம் ஒட்டிக்கொள்ளாதபடி உதறித்தள்ள வேண்டும். நம்மிடமுள்ள பாபம் விலக உபாயத்தை அனுஷ்டிப்பதுடன் மேற்கொண்டு பாபம் சேராமல் கவனித்துக்கொள்ள வேண்டும். பாபகரமான காரியத்தை ஒருபோதும் செய்யக் கூடாது.

மனம் பரிசுத்தமாய்விட்டால் உள்ளது உள்ளபடி அறியும் சக்தி அதற்கு ஏற்பட்டுவிடும். உலகப்பொருள்கள் உண்மையில் தோஷங்கள் நிறைந்துள்ளபோதிலும், நம் மனதில் கல்மஷம் இருந்தபடியால் அவை நமக்குப் புலனாக வில்லை. அதுமட்டும் அல்ல. அது நன்மை பயக்கும் என்றும் எண்ணிக்கொண்டிருந்தோம். இப்பொழுது கர்மயோகத் தால் பாபம் விலகி சித்தம் பரிசுத்தமாய்விட்டபடியால் விஷயங்களிலுள்ள தோஷங்கள் நன்கு தெரியவரும். நித்யா நித்ய விவேகத்தால் எல்லாவற்றிலும் வைராக்யம் ஏற்படும். அமிருதமாயிருந்தால்கூட விஷம் கலந்திருப்பது தெரிந்து விட்டால் யாருக்காவது அதைச் சாப்பிட ஆசை வருமா? ஆகவே பிரஹ்மலோகம்வரை எல்லா போகங்களிலும் வைராக்யம் ஏற்படுவதுதான் சித்த சுத்தியின் அடையாளம். வைராக்யத்தைக் கொண்டுதான் அவரவர்கள் சித்த சுத்தியை தீர்மானித்துக்கொள்ளவேண்டும். அதுவரை சித்ததோஷம் விலக கர்மயோகத்தை அநுஷ்டிக்கவேண்டும்.

ஸம்பூர்ண வைராக்யம் ஏற்பட்டபிறகு தோஷம் அற்றதும், நித்யநிரதிசய ஆனந்த ஸ்வரூபமுமான ஆத்ம ஸ்வரூபத்தை அடைவதில் தீவ்ரமான ஆவல்கொள்ள வேண்டும். இதுதான் முமுக்ஷுத்வம் என்பது. ஆத்ம ஸ்வரூபத்தைச் சரிவர உணராததால்தான் எல்லாத் துன்பங் களும் ஏற்பட்டுள்ளன. துக்கம் விலகி நித்யானந்தத்தைத் தரும் ஆத்மஞானத்தை அடையும் முயற்சியைக் கைக்கொள்ளவேண்டும்.

இதற்கு முதல் கார்யமாக விரைவில் தன் வீட்டைவிட்டு வெளிக்கிளம்பு என்று சொல்லி முதல் உபதேசத்தை முடிக்கிறார். உலகத்தாரோடு ஒட்டி வாழ்ந்து வரும் வரை ஆத்ம ஞானத்தை ஸம்பாதிப்பது ஸாத்யமல்ல. உலக வியவஹாரங்களும், ஸுகதுக்கங்களும் மாறி மாறி வந்துகொண்டே இருக்கும். கிருஹஸ்தனுக்கு வைதிக கர்மாக்கள் ஏராளமாயிருப்பதால் ஆத்ம விசாரத்திற்கு அதிகமாக அவகாசம் கிடைக்காது. ஆகையால் எல்லாவற்றிலும் அபிமானத்தைத் துறந்து தனக்கென ஒரு பொருளையும் சேர்த்துக்கொள்ளாமல் த்யாகம் செய்து வீட்டைவிட்டு வெளிக்கிளம்பவேண்டும். காட்டிற்குச் செல்லவேண்டும் அதாவது விதிபூர்வகமாக ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்துகொள்ளவேண்டும். முதல் சுலோகத்தில் தன் வீட்டைவிட்டு விரைவில் வெளிக் கிளம்பு என்னும் கடைசி உபதேசத்திற்கு, இதுவரை தன்னுடையது என்று எண்ணிக்கொண்டிருந்த வீடு, மனைவி, புத்ரன், பொருள் முதலிய எல்லாவற்றிலும் அபிமானத்தைத் துறக்கவேண்டும் என்பதுதான் கருத்து. (1)

(அ) முதல் சுலோகத்தில் பிரஹ்மசாரி, கிருஹஸ்தன், வானப்ரஸ்தன் இவர்களைப்பற்றிக் கூறி கடைசியில் ஸந்யாஸத்தையும் காட்டினார். எல்லாவற்றையும் துறந்த ஸந்யாஸியும் த்யாகம் செய்யாமல் கைக்கொள்ளவேண்டிய தர்மங்களை இரண்டாவது சுலோகத்தில் கூறுகிறார். மேலும், ஆத்ம விசாரத்திற்கு ஸாதனமாக விவேகம், வைராக்யம், முமுக்ஷுத்வம் என்ற மூன்றையும் முதல் சுலோகத்தில் காட்டி நான்காவதான சமாதி ஷட்கத்தையும் குருவினிடம் சென்று ஆத்மவிசாரம் செய்யும் முறையையும் இரண்டாவது சுலோகத்தில் குறிப்பிடுகிறார்:—

सङ्गः सत्सु विधीयतां भगवतो भक्तिर्दृढाऽऽधीयतां
शान्त्यादिः परिचीयतां दृढतरं कर्माशु संत्यज्यताम् ।

सद्विद्वानुपसर्प्यतां अनुदिनं तत्पादुका सेव्यतां
ब्रह्मैकाक्षरमर्थ्यतां श्रुतिशिरोवाक्यं समाकर्ण्यताम् ॥ २ ॥

ஸங்க: ஸத்ஸு விதீயதாம் பகவதோ பக்திர் த்ருடாதீயதாம்
ஶாந்த்யாதி: பரிசீயதாம் த்ருடதரம் கர்மாஶு
ஸந்த்யஜ்யதாம் ।
ஸத்வித்வான் உபஸர்ப்யதாம் அநுதினம் தத்பாதுகா
ஸேவ்யதாம்
ப்ரஹ்மைகாக்ஷரமர்த்யதாம் ச்ருதிஶிரோவாக்யம்
ஸமாகர்ண்யதாம் ॥

**सत्सु**–நல்லோர்களிடம், **सङ्गः**–சேர்க்கை, **विधीयतां**–செய்யவேண்டும். **भगवतः**-ஈசுவரனுடைய, **दृढा**-உறுதியான, **भक्तिः**-பக்தியானது, **आधीयतां**–கைக்கொள்ளப்படவேண்டும். **शान्त्यादिः**-சாந்தி முதலானது, **परिचीयतां**–பழக்கிக்கொள்ளப் படவேண்டும். **कर्म**–வேறு கர்மா, **आशु**–விரைவில், **दृढतरं**–நன்ருக, **संत्यज्यताम्** –விடப்படவேண்டும். **सद्विद्वान्** –நல்ல வித்வானிடம் (ப்ரஹ்மஞானியிடம்) **उपसर्प्यतां**-முறைப்படி நெருங்கவேண்டும். **अनुदिनं** – தினந்தோறும், **तत्पादुका** – அவருடைய பாதுகை, **सेव्यतां**–ஸேவிக்கப்படவேண்டும். **ब्रह्म एकाक्षरं**–ப்ரஹ்மஸ்வரூபமான ஒரே அக்ஷர (பிரணவ) மானது, **अर्थ्यतां**–பிரார்த்திக்கப்படவேண்டும் (ஒன்ருயும் அழிவற்றதாயும் உள்ள பரப்ரஹ்மஸ்வரூபத்தைக் கேட்கக் வேண்டும்). **श्रुतिशिरोवाक्यं**-உபநிஷத் வாக்யம், **समाकर्ण्यताम्** சிரவணம் செய்யப்படவேண்டும்.

எல்லா ஸங்கங்களையும் தியாகம்செய்தபோதிலும் ஸாதுக்களின் ஸங்கத்தை விடாமல் கைக்கொள்ளவேண்டும். விஷயங்களை இப்பொழுது பரித்யாகம் செய்தபோதிலும் வெகுகாலம் அநுபவித்திருப்பதால் மனதில் துர்வாஸனை நிறைந்திருக்கும். அது இவனை சமயத்தில் கிளப்பிவிடும். பெரியோர்களிடம் சேர்ந்து பழகுவதன் மூலம் ஸத்வாஸனை ஏறினல்தான் துர்வாஸனை விலகும். அப்பொழுது வைராக்

யம் உறுதிப்படும். நல்ல வாஸனையுள்ள பொருளைக்கொண்டு கெட்ட நாற்றத்தைப் போக்குவதில்லையா? ஆரம்பகாலத்தில் ஸத்வகுணத்தைக் கைக்கொண்டு பின்னால் குணாதீத நிலையை அடைவதுபோல் ஸாதுக்களின் ஸங்கத்தால்தான் அஸங்கமான நிலையை அடையமுடியும். பகவானிடம் அவ்யாஜமான பக்தி ஸ்திரமாக இருக்கவேண்டும். சரீரம், வாக், மனம் இவைகளால் பகவானுக்கு பிரீதி உண்டாகும் காரியங்களையே செய்யவேண்டும். ஈச்வராநுக்ரஹத்தால்தான் அதிக சிரமமில்லாமல் இடையூறு இல்லாமல் ஸுலபமாக ஞானத்தை அடையமுடியும்.

ஞானத்திற்கு உபகாரமான சமம் முதலிய குணங்களைப் பழக்கத்தில் கொண்டுவரவேண்டும். மனதையும் வெளிப் புலன்களையும் அடக்குதல், லௌகிக ப்ரவ்ருத்தியிலிருந்து ஓய்வு அடைதல், பொறுமை, முக்யமாக குளிர்-வெய்யில், ஸுக-துக்கங்கள் முதலானவைகளை ஸஹித்துக்கொள்ளுதல், குரு வாக்யத்திலும் வேதாந்த வாக்யத்திலும் விசுவாஸம், மனதை ஒரே இடத்தில் நிலைநிறுத்தல் இவைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக பழக்கத்தில் கொண்டுவரவேண்டும். ஞானத்திற்கு இடைஞ்சலானதும், பகவானுக்கு ப்ரீதியைக் கொடுக்காததும் பந்தத்தைக் கொடுக்கக்கூடியதுமான கார்யங்களை அறவே விட்டுவிடவேண்டும்.

ஸத்குருவின் உபதேசத்தால்தான் ஞானம்பெறமுடியும். வேறு மார்க்கம் கிடையாது. ஆகையால் ஸத்குருவைத் தேடிச் செல்லவேண்டும். அவர் 'ஸத்' வஸ்துவை (ப்ரஹ்மத்தை) நேரில் அறிந்தவராயிருக்கவேண்டும். ஸதாசாரஸம்பன்னராகவும் இருக்கவேண்டும். நற்கர்மம் புரிபவராயிருந்தாலும் அக்ஞானியாயிருந்தால் அவரிடம் உபதேசம் பெறமுடியாது. ஞானியாக இருந்து ஸதாசாரமில்லாதவராயிருந்தால், ஞானபலத்தால் அது அவருக்கு தோஷமாகாது. ஸாதகநிலையிலிருக்கும் சிஷ்யன் அவரைப் பார்த்து அவர்போல நடக்க ஆரம்பித்துவிட்டால் கெட்டுப்

போய்விடுவான். ஆகையால் ஞானமும் ஆசாரமும் பொருந்திய குருவிடம் செல்லவேண்டும். சில மஹான்கள் தங்களுக்குப் பிரயோஜனம் இல்லாவிட்டாலும் மற்றவருக்கு வழிகாட்டுவதற்காக சாஸ்திர முறை தவருது நடப்பார்கள். சாஸ்திர முறைப்படி விநயஸம்பத்துடன் கர்வம்கொள்ளாமல் குருவைத் தேடி அடைந்து அவர் பாதங்களில் சரணுகதி செய்யவேண்டும். அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு தினந் தோறும் குருவின் பாதத்தை ஸேவிக்கவேண்டும். அவரை ஈசுவரனுக பாவிக்கவேண்டும். மனத்தில் குருவின் த்யானம், வாக்கால் குரு மஹிமைகளைக் கூறல், சரீரத்தால் குருவின் காரியங்களைச் செய்தல் இவ்விதம் முக்கரணங் களாலும் எப்பொழுதும் பக்தியுடன் குருவை வழிபட வேண்டும். குரு பக்தியால், அவர் உபதேசம் செய்ததோ, செய்யாததோ எல்லாம் மனதில் நன்கு விளங்கும்.

இவ்வாறு பக்தி, வைராக்யம், நற்குணங்கள் நிறைந்த வனுக சிஷ்யன் சுச்ரூஷையால் குருவின் மனதிற்கு பிரீதியை உண்டுபண்ணி சமயம்பார்த்து மிகுந்த வினயத் துடன் 'நான் யார்? ஈசுவரன் யார்? பந்தம், மோக்ஷம், ஞானம், அக்ஞானம் இவைகளின் ஸ்வரூபம் யாது?' என்று கேட்கவேண்டும். அத்விதீயமான அழிவற்ற ப்ரஹ்மத்தை யும், ப்ரஹ்மத்தின் வாசகமாயும் ப்ரஹ்மஸ்வரூபமாயுமுள்ள ஒரே அக்ஷரமான பிரணவத்தையும் உபதேசிக்கும்படி பிரார்த்திக்கவேண்டும். அவரால் உபதேசிக்கப்பட்ட பிரணவத்தை அதன் பொருளான ப்ரஹ்மஸ்வரூபாநு ஸந்தானத்துடன் எப்பொழுதும் ஜபம் செய்துவரவேண்டும். வேதாந்தத்தில் உள்ள மஹாவாக்யத்தால்தான் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் உண்டாகும். ஆகையால் குரு சிஷ்யனுக்கு அதை உபதேசிப்பார். மஹா வாக்யத்தின் அர்த்தத்தை குருவிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். "தேசம் காலம், வஸ்து என்ற மூன்றுவித பரிச்சேதங்களும் (எல்லை களும்) அற்றது ப்ரஹ்மம். எல்லா சரீரங்களிலும் விளங்கும்

ஜீவனும் இதுவேதான். இது ஒன்றுதான் உண்மைப் பொருள்" இதுவே எல்லா மஹாவாக்யங்களின் கருத்து. எல்லா உபநிஷத்துக்களுக்கும் இதில்தான் தாத்பர்யம் என்பதை குருமுகமாக வேதாந்த விசாரம் செய்து ஸந்தேஹத்திற்கிடமன்னியில் தீர்மானமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். இதைத்தான் 'சிரவணம்' என்பார்கள். சிரவணத்திற்காகத்தான் ஸந்யாஸாசிரமம் ஏற்பட்டிருக்கிறது. இந்த சிரவணத்தால் ஸம்சயபாவனை (உபநிஷத்துக்களின் தாத்பர்யம் என்ன என்பதில் ஸந்தேஹம்) நீங்கிவிடும். எல்லா உபநிஷத்துக்களுக்கும் ஜீவப்ரஹ்மைக்யத்தில் தான் தாத்பர்யம் என்பது உறுதிப்பட்டுவிடும். (2)

(அ) இரண்டாவது சுலோகத்தின் முடிவில் சிரவணத்தைப்பற்றிக் கூறிவிட்டு அதற்கு அடுத்ததான மனன நிதித்யாஸனங்களை மூன்ருவது சுலோகத்தில் விளக்கிக்கூறுகிருர் :—

वाक्यार्थः सुविचार्यतां श्रुतिशिरःपक्षः समाश्रीयतां
दुस्तर्कात्सुविरम्यतां श्रुतिमतस्तर्कोऽनुसंधीयताम् ।
ब्रह्मास्मीति विभाव्यतामहरहर्गर्वः परित्यज्यतां
देहेऽहंमतिरुज्झ्यतां बुधजनैर्वादः परित्यज्यताम् ॥ ३ ॥

வாக்யார்த்த: ஸுவிசார்யதாம் ச்ருதிஸிர: பக்ஷ:
ஸமாச்ரீயதாம்
துஸ்தர்காத் ஸுவிரம்யதாம் ச்ருதிமதஸ்தர்கோநு
ஸந்தீயதாம் ।
ப்ரஹ்மாஸ்மீதி விபாவ்யதாமஹரஹர் கர்வ: பரித்யஜ்யதாம்
தேஹேSஹம்மதிருஜ்யதாம் புதஜனைர் வாத:
பரித்யஜ்யதாம் ॥

**वाक्यार्थः** - மஹாவாக்யங்களின் அர்த்தம், **सुविचार्यतां**- நன்கு விசாரிக்கப்படவேண்டும். **श्रुतिशिरःपक्षः**- உபநிஷத்துக்கள் கூறும் ஸித்தாந்தம், **समाश्रीयतां**-கைக்கொள்ளப்படவேண்டும். **दुस्तर्कात्** - கெட்ட தர்க்கத்திலிருந்து,

**सुविरम्यतां** - நன்கு ஒதுங்கவேண்டும். **श्रुतिमतः** - உபநிஷத்துக்கு ஸம்மதமான, **तर्कः** – யுக்தி, **अनुसंधीयतां** - ஞாபகப் படுத்திக்கொள்ளவேண்டும். **ब्रह्म अस्मि** - (நான்) ப்ரஹ்மமாக இருக்கிறேன் **इति** - என்று, **विभाव्यतां** - தியானம் செய்ய வேண்டும். **अहरहः** - தினந்தோறும் (எப்பொழுதும்) **गर्वः** - கர்வம், **परित्यज्यतां** - விடப்படவேண்டும். **देहे** - சரீரத்தில், **अहंमतिः** - நான் என்ற எண்ணம், **उज्झ्यतां**-தள்ளப்பட வேண்டும். **बुधजनैः** - படித்தவர்களுடன், **वादः** - வியவஹாரம் **परित्यज्यतां**-விடப்படவேண்டும்.

குரு முகமாக சிரவணம் செய்தபிறகு குருவின் வாக்யத்திலும், வேதாந்தத்திலும் விசுவாஸம் இருப்பதால் ஸந்தேஹம் நீங்கி உபநிஷத்துக்களின் தாத்பர்யம் ஜீவ ப்ரஹ்மைக்யத்தில் தான் என்பது தீர்மானமாகத் தெரிந்த போதிலும், யுக்திக்கும் அநுபவத்திற்கும் இது ஒத்துவர வில்லையே, பிரத்யக்ஷவிருத்தமாக இருக்கிறதே என்ற எண்ணம் ஏற்படக்கூடும். இதுதான் அஸம்பாவனை என்பது. இது நீங்குவதற்காக மனனம் செய்யவேண்டும். தகுந்த யுக்திகளைக் கண்டு பிடித்து அதன் மூலம் உபநிஷத் தாத்பர்யம் பொருத்தமானது தான் என்று தீர்மானிப்பது தான் மனனம் என்பது. ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யர் தம்முடைய எல்லா பிரகரணங்களிலும் மனனத்திற்காகவே உபநிஷத் ஸித்தாந்தத்திற்கு ஸாதகமாக அநேக யுக்திகளைக் காட்டியிருக்கிறார்.

உபநிஷத்துக்களிலுள்ள மஹாவாக்யங்களின் அர்த்தத்தை விசாரிக்கவேண்டும். **तत् त्वं असि** (தத் த்வம் அஸி) என்ற இடத்தில் 'தத்' பதத்திற்குப் பொருள் ஈசுவரன். அவன் ஒருவன், எல்லாம் அறிந்தவன். எல்லா சக்திகளும் உள்ளவன். உலகைப் படைத்துக் காத்து, அழிப்பவன். நமக்குப் புலப்படாதவன். நம்மை ஆள்பவன். 'த்வம்' பதத்திற்குப் பொருள் ஜீவன். அவன் பல. அல்பக்ஞன், சக்தியற்றவன், ப்ரத்யக்ஷமாகத் தோன்றுபவன். 'அஸி'

பதத்தால் இவ்விருவரும் ஒன்று என்று உபநிஷத் கூறுகிறது. ஒன்றுக்கொன்று விருத்தமான வெவ்வேறு லக்ஷணங்கள் உள்ள இவ்விருவரும் ஒன்று என்று கூறுவது பொருத்தமாக இல்லை. இதனுல் பலர் உபநிஷத் கூறுவது தப்பு என்று தீர்மானித்து சுருதிக்கு விருத்தமாகவே ஜீவஸ்வரூபத்தை யும் ஈசுவரஸ்வரூபத்தையும் காட்டி இரண்டும் வெவ்வேறு என்று தீர்மானிக்கிருர்கள். மற்றும் சிலர் மிகுந்த தைர்யத் துடன் ஜீவனும் ஈசுவரனும் வேறுதான் என்ற தங்கள் கொள்கைக்குத் தக்கவாறு "तस्य त्वं तत्वं असि (தஸ்ய த்வம் தத்த்வம் அஸி) நீ அவனைச் சேர்ந்தவனுக இருக்கிருய். तास्मिन् त्वं तत्वं असि (தஸ்மின் த்வம் தத்த்வம் அஸி) நீ அவனிடத்தில் இருக்கிருய். अतत् त्वं असि (அதத் த்வம் அஸி) நீ அவன் இல்லை" என்று எல்லாம் பலவிதமாக சுருதியின் அர்த்தத்தையே மாற்றிவிடுகிருர்கள். இவர்கள் எல்லோரும் தங்கள் கொள்கைகளுக்கு ஸாதகமாகப் பல யுக்திகளையும் காட்டுகிருர்கள். இவர்கள் கூறும் யுக்தி களையோ, கொள்கைகளையோ மனதால் நினைக்கவேகூடாது. புத்திக்கு வியாமோஹம் ஏற்பட்டுவிடும். முதலில் உபநிஷத்து கூறுவதையே ஸித்தாந்தமாக தீர்மானித்துக்கொள்ள வேண்டும். பிறகு துஸ்தர்க்கங்களுக்கு இடம் கொடுக்காமல் உபநிஷத் ஸித்தாந்தம் பொருந்தும்படியான யுக்திகளைத் தேடிக்கண்டுபிடிக்கவேண்டும். அதாவது:—

ஜீவஸ்வரூபத்தையும் ஈசுவர ஸ்வரூபத்தையும் நன்கு பரிசோதித்துப் பார்த்தால் கீழ்க்கண்ட உண்மை தெரிய வரும். அக்ஞானத்தை உபாதியாகக் கொண்டவன் ஜீவன். தேஹ பேதத்தால் தான் ஜீவன் வெவ்வேருகக் காணப்படு கிருன். உண்மையில் ஜீவஸ்வரூபம் ஒன்றே. ஞானக் குறைவு, சக்திக்குறைவு முதலானவை எல்லாம் உபாதியால் ஏற்பட்டவையே தவிற ஜீவஸ்வரூபத்தில் இவை ஒன்றும் கிடையாது. உபாதியை நீக்கிவிட்டால் மிஞ்சுவது சுத்த சைதன்யமே. ஈசுவர ஸ்வரூபத்திலும் ஸர்வக்ஞத்வம்

முதலான தர்மங்களெல்லாம் மாயை என்ற உபாதியால் ஏற்பட்டவையே. மாயையை நீக்கிவிட்டால் அங்கும் மிஞ்சுவது சுத்த சைதன்யமே. ஒரே லக்ஷணமுள்ளதான தால் இரண்டும் ஒன்றே. இதைத்தான் மஹாவாக்யம் காட்டுகிறது. सोयं देवदत्तः (ஸோயம் தேவதத்த:) அந்தக் காலத்தில் அந்த இடத்தில் (கண்ட) தேவதத்தன் இவன் என்ற வாக்யம் காலமும் தேசமும் வேறுபட்டாலும் கூட தேவதத்த ஸ்வரூபம் ஒன்று என்பதை உணர்த்துகிறது. தேவதத்தஸ்வரூபத்தில் சேராத காலதேசங்கள் தேவ தத்தனை வேறுபடுத்துவதில்லை. அதுபோல ஜீவஸ்வரூபத் திலும் ஈசுவர ஸ்வரூபத்திலும் சேராத உபாதியிலுள்ள தர்மங்கள் அந்த ஸ்வரூபத்தை வேறுபடுத்த முடியாது. 'தத்'பதமும் 'த்வம்' பதமும் லக்ஷணையால் சுத்த சைதன் யத்தைக் குறிக்கிறது. இது ஒன்று என்பதை அஸிபதம் காட்டு கிறது. ஆகவே மஹாவாக்யார்த்தமான ஜீவப்ரஹ்மைக்யம் பொருத்தமுள்ளதாகவே இருக்கிறது. இதுபோலவே மற்ற மஹாவாக்யங்களின் அர்த்தத்தையும் விசாரித்துத் தெரிந்து கொள்ளவேண்டும். மண்ணிலிருந்து உண்டாகும் குடம் எப்படி மண்ணைக்காட்டிலும் வேறில்லையோ அதுபோல ப்ரஹ்மத்திலிருந்து உண்டான பிரபஞ்சம் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறல்ல. இம்மாதிரியான பல யுக்திகளைக் கொண்டு உபநிஷத் ஸித்தாந்தமான அத்வைத ப்ரஹ்ம தத்வத்தை மனதில் நிலை நிறுத்திக்கொள்ளவேண்டும்.

இவ்வாறு வேதாந்த சிரவணத்தாலும், மனனத்தாலும் ஸம்சயபாவனையும், அஸம்பாவனையும் நீங்கியபிறகு வெளி உலகத் தோற்றமாகிய விபரீதபாவனை நீங்க 'நான் ப்ரஹ்ம ஸ்வரூபம்' என்பதை எப்பொழுதும் தியானம் செய்ய வேண்டும்.. இப்பொழுது ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு அக்ஞானம் விலகிவிடும்.

இனி ஞானிக்கு இயற்கையாக அமைந்துள்ள சில லக்ஷணங்களைக் கூறுகிறார். இவைகளை முமுக்ஷு ஸாதனங்

களாக கைக்கொள்ளவேண்டும். ஞானிக்கு தேஹத்தில் கொஞ்சமும் அபிமானம் இருக்காது. சரீரத்தை நான் என ஒருபொழுதும் நினைக்கமாட்டான். சரீராபிமானம் இல்லாததால் ஞானிக்கு கர்வமும் இருக்காது. சரீரத்தை நான் என்று எண்ணுபவன் தான் மற்றவரிடம் இல்லாத சிறப்பு தன்னிடம் இருப்பதைக்கண்டு கர்வம் கொள்வான். ஞானியோ வேற்றுமை உணர்ச்சியில்லாமல் எல்லாவற்றையும் ப்ரஹ்ம ஸ்வரூபமாகப் பார்ப்பவன். மேலும் ஞானிக்குப் புதிதாக வந்தது ஒன்றுமில்லை. கழுத்தில் உள்ள மாலையை கவனிக்காமல் ஊர்முழுவதும் தேடிக் கடைசியில் நண்பன் வார்த்தையின் மூலம் தெரிந்து கொள்வதுபோல், தான் எப்பொழுதுமே ப்ரஹ்ம ஸ்வரூபமாயிருந்தும் அக்ஞானத்தால் மறைந்திருந்தது, இப்பொழுது குருவின் உபதேசத்தால் தெரிகிறது. இவ்வளவுதான். ஆகவே ஞானிக்குப் புதிதாக ஏற்பட்டது ஒன்றுமில்லாததாலும் கர்வம் ஏற்பட நியாயமில்லை.

இவ்வாறு ஸ்வஸ்வரூபத்தை அறிந்து அதிலேயே நிலைத்து நிற்கும் ஞானிக்கு கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியதோ, பதில் கூறவேண்டியதோ அடைய வேண்டியதோ ஒன்றும் இல்லாததால் படித்தவர்களுடன் வியவஹாரம் செய்யமாட்டான். வேற்றுமை உணர்ச்சி இல்லாமல் எங்கும் ப்ரஹ்மத்தையே காண்பான். முமுக்ஷுவும் குருவினிடம் தத்வத்தை அறிந்துகொள்ள வேண்டும். பிறருடன் வீண் வியவஹாரம் செய்யக்கூடாது.

(அ) ப்ரஹ்மானந்தத்தில் மூழ்கியுள்ள தத்வஞானிக்கு பிராரப்தம் உள்ளவரை சரீர யாத்திரை நடக்கும் முறைகளையும் உலகில் அவன் பழகும் விதத்தையும் பரமஹம்ஸ லக்ஷணங்களையும் கூறுகிறார்:—

क्षुद्व्याधिश्च चिकित्स्यतां प्रतिदिनं भिक्षौषधं भुज्यतां
स्वाद्वन्नं नतु याच्यतां विधिवशात्प्राप्तेन संतुष्यताम् ।

औदासीन्यमभीप्स्यतां जनकृपानैष्ठुर्यमुत्सृज्यतां
शीतोष्णादि विषह्यतां न तु वृथा वाक्यं समुच्चार्यताम् ॥ ४॥

க்ஷுத்வ்யாதிச்ச சிகித்ஸ்யதாம் ப்ரதிதினம் பிக்ஷௌஷதம்
புஜ்யதாம்
ஸ்வாத்வன்னம் ந து யாச்யதாம் விதிவஶாத்
ப்ராப்தேந ஸந்துஷ்யதாம் ।
ஔதாஸீந்யமபீப்ஸ்யதாம் ஜநக்ருபாநைஷ்டுர்யம்
உத்ஸ்ருஜ்யதாம்
ஶீதோஷ்ணாதி விஷஹ்யதாம் ந து வ்ருதா வாக்யம்
ஸமுச்சார்யதாம் ॥

क्षुद्व्याधिश्च–பசி என்ற வியாதி, चिकित्स्यतां–சிகித்ஸை செய்யப்படவேண்டும். (அதற்காக) प्रतिदिनं–தினந்தோறும், भिक्षौषधं–பிக்ஷை என்னும் மருந்து, भुज्यतां–உட்கொள்ளப் படவேண்டும். स्वाद्वन्नं–ருசியான உணவு, न तु याच्यताम्–வேண்டப்படக்கூடாது. विधिवशात्–தைவவசமாக, प्राप्तेन–கிடைத்ததைக் கொண்டு, सन्तुष्यताम्–ஸந்தோஷப்பட வேண்டும். औदासीन्यं–ஒன்றிலும் பற்றற்ற தடஸ்த நிலையை अभीप्स्यतां–விரும்பவேண்டும். जनकृपानैष्ठुर्यं–பொது ஜனங்களிடம் இரக்கமோ கொடுமையோ இரண்டும், उत्सृज्यतां–காட்டகூடாது. शीतोष्णादि–குளிர், சூடு, முதலியவை, विषह्यतां–பொறுத்துக் கொள்ளப்படவேண்டும். वृथा वाक्यं–வீண் வார்த்தை न तु समुच्चार्यतां–பேசக்கூடாது.

ஞானி சரீரத்தை மறந்து ஸமாதியில் ப்ரஹ்மானந்த அனுபவத்தில் மூழ்கியிருக்கும்பொழுது பசி, தாகம் ஒன்றுமே தெரியாது. ஆனந்தானுபவத்தாலேயே ப்ராணதாரணமும் ஏற்பட்டுவிடும். லோகானுக்ரஹத்திற்காக நம் அதிருஷ்டத்தால் ஸமாதி கலைந்து வெளியில் ஞானி வருவானேயாகில் அப்பொழுது பசி, தாகம் தோன்றலாம். அப்பொழுது அதைத் தணிக்கவும், பிராணதாரணத்திற்காகவும் பிக்ஷை எடுத்து உண்பான். பிக்ஷை எடுக்கும்பொழுது பிராரப்த

கர்மவசத்தால் எது கிடைக்கிறதோ, அதைக்கொண்டே திருப்தி அடைவான். நாக்குக்கு அடிமையாகி ருசியான உணவை வேண்டமாட்டான். பிராணதாரணத்திற்கு எவ்வளவு தேவையோ, அவ்வளவுதான் சாப்பிடுவான். மேலும் பசியைப் பிணியாக எண்ணி இந்தப் பிணி நீங்க பிக்ஷான்னத்தை ஔஷதமாக நினைத்து சாப்பிடுவான். வியாதி வந்தால் மருந்து சாப்பிடுகிறோம். மருந்தின் ருசியைக் கவனிப்பதில்லை. கசப்போ, துவர்ப்போ, உப்போ எதுவாயிருந்தாலும் சாப்பிடுகிறோம். அளவுடன்தான் மருந்தைச் சாப்பிடுகிறோம். அதுபோல் கிடைத்தது ருசியாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் பசி நீங்கவும், பிராணனை தரிக்கவும் வேண்டிய அளவுதான் சாப்பிடுவான் ருசியான ஆஹாரத்தையோ, அதிக அளவையோ விரும்பமாட்டான். அதற்காக அதிக முயற்சியும் எடுத்துக்கொள்ளமாட்டான். எந்த உணவினாலும் பசி நீங்கும். பிராணனையும் தரிக்க முடியும். பிக்ஷையை சேகரித்து வைத்துக்கொள்ளவும் மாட்டான். இந்த தர்மங்களை எல்லாம் ஸாதகனும் கைக்கொள்ளவேண்டும். பிக்ஷை எடுக்கும் சமயத்தில்தான் கிராமத்திற்குச் செல்லவேண்டும். மற்ற சமயங்களில் தனிமையாக இருக்கவேண்டும். ஒரே இடத்தில் வஸிக்கக் கூடாது.

ஒன்றிலும் பற்றுதல்கூடாது. உலகில் நடக்கும் ஒரு காரியத்திலும் தான் ஸம்பந்தப்படாமல் உதாஸீனனாக இருக்கவேண்டும். உலகில் ஒருவனிடம் அன்பினால் இரக்கத்தையோ, மற்றவனிடம் த்வேஷத்தையோ காட்டக் கூடாது. கிருபை ஸத்வகுணகார்யம். க்ரௌர்யம் தமோ குண கார்யம். இவைகளால் ராக த்வேஷங்கள் வளரும். கிருபையினால் பரதருக்கு மான் பிறவி ஏற்பட்டது. க்ரௌர்யத்தால் நஹுஷன் ஸ்வர்க்கத்திலிருந்து விழுந்தான். இரண்டுமே ஞானிக்கு இடைஞ்சல்தான். எங்கும் ஸம த்ருஷ்டி வேண்டும். "எனக்கு த்வேஷ்யனும் இல்லை. ப்ரியனும் இல்லை" என்று பகவான் கீதையில் சொல்கிறார்.

ஆனாலும் ஞானமார்க்கத்தைக் காப்பாற்றவும், ஞானி பரம்பரை உலகில் நீடித்து பிறர் க்ஷேமம் அடையவும், உத்தமாதிகாரியான சிஷ்யன் பிடிவாதமாக தன்னிடம் கெஞ்சி வேண்டிக்கொள்ளும் பக்ஷத்தில் அவனிடம் மட்டும் இரக்கம்காட்டி அவனைக் கைதூக்கிவிட ஞானத்தை உபதேசிக்கவேண்டும்.

குளிர்-உஷ்ணம், பசி-தாகம், ஸுகம்-துக்கம் இவைகளை ஸஹித்துக்கொள்ளவேண்டும். வீண் வார்த்தை பேசக் கூடாது. உபநிஷத் விஷயங்களைத்தவிற மற்ற விஷயங்களில் மௌனத்தைக் கைக்கொள்ளவேண்டும். இவைகள் எல்லாம் ஞானியின் லக்ஷணங்கள். முமுக்ஷு இவைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக பழக்கத்தில் கொண்டுவரவேண்டும்.

(அ) இதற்குமேல் ஞானியின் நிலையைக் கூறுகிறார் :—

**एकान्ते सुखमास्यतां परतरे चेतः समाधीयतां**
**पूर्णात्मा सुसमीक्ष्यतां जगदिदं तद्बाधितं दृश्यताम् ।**
**प्राक्कर्म प्रविलाप्यतां चितिबलान्नाप्युत्तरैः श्लिष्यतां**
**प्रारब्धं त्विह भुज्यतामथ परब्रह्मात्मना स्थीयताम् ॥ ५ ॥**

ஏகாந்தே ஸுகமாஸ்யதாம் பரதரே சேத: ஸமாதீயதாம்
பூர்ணாத்மா ஸுஸமீக்ஷ்யதாம் ஜகதிதம் தத்பாதிதம்
த்ருஶ்யதாம்
ப்ராக்கர்ம ப்ரவிலாப்யதாம் சிதிபலாத் நாப்யுத்தரை:
ச்லிஷ்யதாம்
ப்ராரப்தம் த்விஹ புஜ்யதாமத பரப்ரஹ்மாத்மநாஸ்தீயதாம்

**एकान्ते**—தனிமையில், **सुखं**—ஸுகமாக, **आस्यतां**—இருக்க வேண்டும். **परतरे**—எல்லாவற்றிற்கும் மேலான ப்ரஹ்மத்திடம், **चेतः**—மனம், **समाधीयतां**— நிலைநிறுத்தப்படவேண்டும். **पूर्णात्मा**—எங்கும் நிறைந்த ஆத்மா, **सुसमीक्ष्यतां**—நன்கு நேரில் காணப்படவேண்டும். **इदं जगत्** - இந்த ஜகத்து, **तद्बाधितं**—

அந்த ஞானத்தால் அறவே மறைந்து போனதாக, **दृश्यतां** காணவேண்டும். **प्राक्कर्म**-முந்தின கர்மா அதாவது ஸஞ்சிதம், **चितिबलात्**-ஞானபலத்தால், **प्रविलाप्यतां**-அழிக்கப்பட வேண்டும். **उत्तरैः**-பின் கர்மாக்களோடு, அதாவது ஆகாமி கர்மாக்களுடன், **न श्लिष्यतां**-ஒட்டமாட்டான். **इह**-இங்கு, **प्रारब्धं तु**-பிராரப்தமோவெனில், **भुज्यतां**-அனுபவிக்கப்பட வேண்டும். **अथ**- அதன் பிறகு, **परब्रह्मात्मना**-பரப்ரஹ்ம ஸ்வரூபமாக, **स्थीयताम्**-இருக்கவேண்டும்.

வெளி ப்ரவிருத்திகளில் ஈடுபட்ட ஜனங்களுடன் சேராமல் தனிமையில் ஆனந்தமாக இருக்கவேண்டும். தனிமையில்தான் ஆனந்தம். அப்பொழுதும் மனமும் இந்திரியங்களும் வெளியில் சென்றுகொண்டிருந்தால் ஆத்மானந்தத்தை அனுபவிக்கமுடியாது. ஆகையால் அவைகளைத் தடுத்து எல்லாவற்றிற்கும் மேலான பரப்ரஹ்மத்தில் மனத்தைச் செலுத்தவேண்டும். தன்னை அந்த ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே தியானம் செய்யவேண்டும். வேறு ஒரு பொருளும் தோன்றக்கூடாது. ஒரு சமயம் அதிலிருந்து மனம் வெளியில் வந்தாலும் அப்பியாஸத்தால் திருப்பித் திருப்பி மனதை அங்கு செலுத்தி அதிலேயே நிலை பெறும்படி செய்யவேண்டும். அப்பொழுது அவன் எங்கும் நிறைந்த ப்ரஹ்மத்தை நேரில் காண்பான். இந்த ப்ரஹ்ம ஞானத்தால் அவனுக்கு ஜகத்தின் உண்மைத் தோற்றம் மறைந்துவிடும். உலகம் தோன்றினலும் இப்பொழுது முன்போல பார்க்கமாட்டான். வேடிக்கையாகப் பார்ப்பான். உண்மை என்ற எண்ணம் நீங்கி பொய் என்ற எண்ணம் ஏற்பட்டுவிடும். உலகத்தில் பழகினலும் அவன் மனத்தில் ஒரு விகாரத்தையும் உண்டுபண்ணுது. கல்லால் செய்து வர்ணம் தீட்டப்பட்டிருந்த நாயைக்கண்டு உண்மை என்று எண்ணி பயந்து நடுங்கியவன் இது கல் தான் என்று தெரிந்தபிறகு முன்போல் பயப்படுவானு ? நாயின் உருவும் தோன்றினலும் அதைக்கல்லாகப்பார்ப்பது

போல, ஞானிக்கு பிரபஞ்சம் தோன்றினலும் அதை பிரஹ்ம மாகவே பார்ப்பான். இந்த பொய்த்தோற்றம் ஞானம் வந்தவுடன் நீங்காது. பிராரப்தம் விலகி விதேஹ முக்தி ஏற்பட்டபின்தான் நீங்கும்.

ஸஞ்சிதம், ஆகாமி, பிராரப்தம் என கர்மா மூன்றுவித மாக பிரிக்கப்பட்டிருக்கிறது. இதுவரை எல்லாப் பிறவி களிலும் நாம் செய்து நம்மிடம் சேர்ந்துள்ள கர்மாக்கள் 'ஸஞ்சிதம்' எனப்படும். இதுவரை அவைகளின் பலனை அநுபவிக்க அவகாசம் ஏற்படாதபோதிலும் பின்னல் பலனைக்கொடுக்கத் தயாராக உள்ள நிலைமையில் நம்மிடம் அவை இருந்துவருகின்றன. இவைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக அநுபவித்தே தீரவேண்டும். ஞானம் வந்து அக்ஞானம் நீங்கியதும் ஸஞ்சிதகர்மா முழுவதும் அழிந்து விடும். பின்னல் செய்யும் கர்மாவிற்கு 'ஆகாமி' என்று பெயர். ஞானம் வந்தபிறகு அவனுக்கு சரீராபிமானம் இல்லாததாலும் 'अहं कर्ता' (நான் செய்கிறேன்) என்ற எண்ணம் இல்லாததாலும் முந்தைய பழக்கத்தை ஒட்டி சரீராதிகள் ஏதாவது காரியங்கள் செய்தாலும் அவை இவனிடம் ஒட்டுவதில்லை. பலனையும் கொடுப்பதில்லை. ஸஞ்சித கர்மாக்களில் இந்த சரீரத்தைக் கொடுத்து பலனைக் கொடுக்க ஆரம்பித்துள்ள கர்மாவுக்கு 'பிராரப்தம்' என்று பெயர். இது ஞானம் வருவதற்கு முன்னமே பலனைக் கொடுக்க ஆரம்பித்துவிட்டபடியால் நடுவில் நிறுத்த முடியாது. ஆகையினல் ஞானியும்கூட பிராரப்த கர்மாவின் பாக்கி பலனை அனுபவித்தேயாகவேண்டும். மாங்கனியை அடிப்பதற்காக மாமரத்தில் எறிந்த கல் கனியை வீழ்த்திய பிறகும் வேகம் உள்ளவரை சென்றுதான் கீழே விழுகிறது. குடம் தயாராய்விட்டாலும் வேகம் உள்ளவரை சுழன்று தான் குயவனின் சக்கரம் நிற்கிறது. இதுபோல் பலனைக் கொடுக்க ஆரம்பித்துவிட்டபடியால் முழுவதும் பலனைக் கொடுத்தபிறகுதான் நீங்கும். ஒருவிதத்திலும் விலக்க

முடியாத நிலையில் "அது அவன் பிராரப்தம்; அனுபவித்துத் தான் தீர்க்கவேண்டும். நாம் என்னசெய்யமுடியும்" என்று உலகில் சொல்வதில்லையா? வஸிஷ்டர், வாமதேவர் முதலான ஞானிகள் பிராரப்த கர்மாவை அநுபவித்ததாக புராணங்கள் கூறுகின்றன. ஆனுல் இந்த பிராரப்த கர்மா நுபவத்தால் ஞானி ஒருவித விகாரமும் அடையமாட்டான். உலகம் பொய் என்ற எண்ணம் உறுதிப்பட்டுவிட்டதாலும், சரீராதிகளைக் காட்டிலும் வேருகத் தன்னைப் பார்ப்பதாலும், பிராரப்த கர்ம பலத்தை சரீராதிகள் அனுபவிக்கும்பொழுது தான் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருப்பான்.

ஞானம் வந்தபிறகு பிராரப்த கர்மாவினுல் உலகில் ஸஞ்சரிக்கும் நிலைதான் 'ஜீவன் முக்தி' என்பது. ஸமீப காலத்தில் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மம் ஜீவன்முக்த நிலையில் ஸஞ்சரித்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேம். ஸ்ரீ சந்திர சேகர ப்ாரதீ ஸ்வாமிகள் ப்ரஹ்மானந்தானுபவத்துடன் ஜீவன்முக்தராக சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடத்தில் விளங்கி இருந்ததை நேரிலும் பார்த்திருக்கிறேம். மேலும் ஞானம் வந்தவுடன் மற்ற கர்மாக்களுடன் பிராரப்தமும் விலகி சரீரம் நீங்கும் பக்ஷத்தில் சிஷ்யனுக்கு உபதேசம் செய்ய ஞானியான ஆசார்யனே இருக்கமாட்டான். '**उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्वदर्शिनः**' (உபதேக்ஷ்யந்தி தே ஞாநம் ஞாநிநஸ்தத்வதர்சிந:) என்று ப்ரஹ்மதத்வத்தை நேரில் அறிந்த ஞானிகள் சரீரத்துடன் இருந்து சிஷ்யர்களுக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள் என்று கீதையில் பரமாத்மா கூறுகிறுர்.

பிராரப்த கர்மா நீங்கியபிறகு எங்கும் நிறைந்த அகண்ட ஸச்சிதானந்த பரப்ரஹ்மஸ்வரூபமாக இருப்பான். எப்பொழுதுமே பரப்ரஹ்ம ஸ்வரூபமாயிருந்தாலும் முன்னுல் தெரியாமலிருந்தது, இப்பொழுது தெரிந்துவிட்டது. ஞானம் வந்தபிறகும் லோகரீதியாக சரீரம் இருந்தது. இதில் மற்றவர்களுக்குப்போல் ஸ்தூல சரீரம் அழிவதுடன் ஸூக்ஷ்ம சரீரமும் அதனதன் காரணத்தில் லயம் அடைந்து

அழிந்துவிடுகிறது. இதுதான் விதேஹமுக்தி என்பது. இதை அடைவதற்கு வேறு இடம் தேடிச் செல்லவேண்டியதில்லை. தேசகாலங்களுக்கு உட்படாத அகண்டபரிபூர்ண ஸச்சிதானந்த ஸ்வரூபமாக விளங்குகிறான்.

இவ்விதமாக ஆசார்ய பகவத்பாதர் அடியிலிருந்து படிப்படியாக மேல்நிலையை அடைவதற்கு வேண்டிய உபாயங்களை உபதேசித்தருளினார்.

உபதேசபஞ்சகம் முற்றிற்று.



॥ श्रीः ॥

# ॥ ब्रह्मानुचिन्तनम् ॥

## ப்ரஹ்மா நுசிந்தனம்

[ப்ரஹ்மா நுசிந்தனம் என்ற 29 சுலோகங்கள் கொண்ட இச்சிறியபிரகரணத்தில் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் அடைந்தவன் தன்னை எவ்வாறு எண்ணிக்கொள்வான் என்பதைக்கூறும் முறையில் ஞானியின் அநுபவத்தைக் காட்டுகிறார். அதாவது ஆசார்யாள் தனது ப்ரஹ்மா நுபவத்தை நன்கு வெளியிடுகிறார். தேஹாதிகளைக் காட்டிலும் வேறான ஆத்மாவே ப்ரஹ்மம் என்று கூறி அத்வைதமான அந்த ப்ரஹ்மத்தின் லக்ஷணங்களையும் குறிப்பிட்டு பிரமாணங்களையும் காட்டுகிறார். ஞானம் வரப்பெறாதவர்களும் கடைத்தேற உபாயங்களைக் கூறுகிறார். அந்த ஞானத்திற்கு ஸாதனமான ஸகுணமூர்த்தி த்யானத்துடன் முடிவடைகிறது. குருவின் உபதேசம் பெற்றபின் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைச் சிந்திக்கவேண்டிய விதத்தைக்காட்டுவதாலும் 26வது சுலோகத்தில் 'इति ब्रह्मानुचिन्तनम्' (இதி ப்ரஹ்மா நுசிந்தனம்-என்பது ப்ரஹ்மா னுசிந்தனம்) என்று காணப்படுவதாலும் இந்நூலுக்கு ப்ரஹ்மானுசிந்தனம் என்ற பெயர் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அர்த்த ஞானத்துடன் இதை பாராயணம் செய்து வந்தாலும் க்ரமமாக சிரேயஸ்ஸை அடையலாம்.]

(அ) ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த தத்வ ஞானி ப்ரஹ்மத்தை ஸ்வஸ்வரூபமாக அநுஸந்தானம் செய்யும் முறையைச் சொல்வதற்காக முதலில் முக்தனின் லக்ஷணத்தைக் கூறுகிறார் :—

**अहमेव परं ब्रह्म वासुदेवाख्यमव्ययम् ।**
**इति स्यात् निश्चितो मुक्तो बद्ध एवान्यथा भवेत् ॥ १ ॥**

அஹமேவ பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்யமவ்யயம் ।
இதி ஸ்யாத் நிச்சிதோ முக்தோ பத்த ஏவாந்யதா பவேத் ॥

**वासुदेवाख्यं** - வாஸுதேவர் என்று பெயருள்ளதும் **अव्ययं** - அழிவற்றதுமான, **परं ब्रह्म**-பரப்ரஹ்மமானது, **अहमेव**-நான்தான், **इति** - என்று, **निश्चितः** - உறுதியான ஞானமுள்ளவன், **मुक्तः** - முக்தனுக, **स्यात्** - இருப்பான், **अन्यथा** - இந்த ஞானம் இல்லாவிடில், **बद्ध एव**-பத்தனுகவே (ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டவனுகவே) **भवेत्** - இருப்பான்.

உலகில் யாவரும் சரீரம், இந்திரியம், மனம் முதலியவைகளை தன் ஸ்வரூபமாக எண்ணுகிருர்கள். சிலசமயம் அவை தன்னுடையவை என்றும் நினைக்கின்றனர். இரண்டுவிதத்திலும் அஹங்கார – மமகாரமூலம் சரீராபிமானம் வேறான்றியிருப்பதால் சரீரத்தையொட்டி ஏற்படும் இன்ப துன்பங்களை மாறி மாறி அனுபவித்துக்கொண்டு ஸம்ஸாரிகளாக, விடுபடாதவர்களாகவே இருக்கின்றனர். சரீராபிமானமிருக்கும் வரை பத்தர்(கட்டுப்பட்டவர்)தான். எப்பொழுது ஆசார்ய உபதேசத்தால் சரீராபிமானம் நீங்கி, நான் சரீராதிகள் அல்ல, இவை என்னுடையதும் அல்ல, நான் ஸச்சிதானந்தமான ப்ரஹ்மம் என்ற ஞானம் ஏற்பட்டு உறுதிப்படுகிறதோ, அப்பொழுது ஸம்ஸார பந்தம் நீங்கிவிடுகிறது. உலக விஷயங்களால் ஸுகமோ துக்கமோ அவனுக்கு ஏற்படுவதில்லை. அவன்தான் முக்தன்.

இங்கு '**वासुदेवाख्यं**, **अव्ययं** - (வாஸுதேவாக்யம், அவ்யயம்) என்ற இரு பதங்களாலும், ப்ரஹ்மத்தின் லக்ஷணம் கூறப்படுகிறது. **वासयतीति वासुः दीव्यतीति देवः वासुश्चासौ देवश्च वासुदेवः** - வாஸு என்ற பதத்திற்கு எல்லாவற்றையும் வஸிக்கும்படி செய்பவர், இருக்கும்படி செய்பவர் என்பது பொருள். அதாவது எல்லாவற்றிற்கும் ஸத்தையைக்கொடுப்பவர். ஸத்தானபொருள் அது ஒன்றே. ஆகவே, **वासु** - (வாஸு) என்ற பதத்தால் 'ஸத்' என்னும் ப்ரஹ்மலக்ஷணம் கூறப்பட்டது. **देवः** - (தேவ:) என்பதற்கு பிரகாசம் உள்ளவர் என்று அர்த்தம். அதனுல் 'சித்' என்னும் லக்ஷணம் கூறப்படுகிறது. தான் ப்ரகாச

ரூபமாக இருந்துகொண்டு எல்லாவற்றையும் பிரகாசப் படுத்துபவர். अव्ययं - (அவ்யயம்) என்ற பதத்தால் 'அநந்தம்' (மூன்றுவித பரிச்சேதமற்றது) என்ற லக்ஷணம் கூறப்படுகிறது. 'सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म' (ஸத்யம், ஞானம், அனந்தம், ப்ரஹ்ம) என்று தைத்திரீய உபநிஷத்தில் கூறப்படும் ப்ரஹ்மம் நான் என்ற ஞானம் ஏற்படவேண்டும். மேலும், 'वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः' (வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:) (கீதை. 7-19) 'सकलमिदमहं च वासुदेवः' (ஸகலமிதம் அஹம் ச வாஸுதேவ:) என்று கூறியுள்ளபடி எல்லாம் ப்ரஹ்மம். அது நான்தான் என்ற ஞானம் உறுதிப்படவேண்டும். இதில் ஸந்தேஹமோ, விபரீதமோ கொஞ்சமாவது ஒருபொழுதும் உண்டாகக் கூடாது. அவனே முக்தன். (1)

(அ) முதல் சுலோகத்தில் முக்தனின் லக்ஷணம் கூறும் முறையில் குருமுகமாக ச்ரவணத்தால் ஏற்படும் தத்வ ஞானத்தைக்காட்டி இப்பொழுது மனன முறையைக் காட்டுகிறார் :—

अहमेव परं ब्रह्म निश्चितं चित्त चिन्त्यताम् ।
चिद्रूपत्वादसङ्गत्वादबाध्यत्वात्प्रयत्नतः ॥ २ ॥

அஹமேவ பரம் ப்ரஹ்ம நிச்சிதம் சித்த சிந்த்யதாம் ।
சித்ரூபத்வாதஸங்கத்வாதபாத்யத்வாத் ப்ரயத்நத: ॥

**चित्त**-ஹே மனமே! **चिद्रूपत्वात्**- ஞான வடிவமாயிருப்பதாலும் **असङ्गत्वात्**-ஒன்றிலும் ஒட்டாததாலும் **अबाध्यत्वात्** முக்காலும் அழியாமலிருப்பதாலும் **अहं**- நான் **परंब्रह्मैव**-பிரஹ்மம் தான்(என்று)**निश्चितं**-உறுதியாக **प्रयत्नतः**-முயற்சியுடன் **चिन्त्यताम्** (உன்னால்) ஆலோசிக்கப்படட்டும்.

ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்று ஆசார்யர் உபதேசித்த விஷயத்தில் சிரவணத்தால் ஸந்தேஹம் நீங்கினாலும் வெவ்வேறு லக்ஷணங்களுள்ள இரண்டு பொருள்கள்

எப்படி ஒன்ருக இருக்கக்கூடும் என்ற ஆசங்கை (அஸம் பாவனை) மனதில் ஏற்படக்கூடும். இதனுல் ஞானம் உறுதிப் படாது. இதற்காக மனனம் செய்யவேண்டும். அதாவது தக்க யுக்திகளைக் கண்டுபிடித்து அவைகள் மூலம் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்ருக இருக்கலாம். விரோதமில்லை என்று தீர்மானிக்கவேண்டும். இதுதான் மனனம் என்பது. அதை இங்கு காட்டுகிருர். ப்ரஹ்மஸ்வரூபம் சித்ரூபம் (ஞானவடிவமானது) அஸங்கம் (ஒன்றுடனும் ஒட்டாதது ஒரு தர்மமும் இல்லாதது) அபாத்யம் (ஞானத்தால் மறைந்துபோகாதது, பொய்யல்ல, உண்மையானது) என்று தெரியவருகிறது. நான் என்று கூறப்படும் பொருளை நன்கு பரிசோதித்து சரீராதிகளிலிருந்து விலக்கிப் பார்த்தோமானுல் அதுவும் இதே லக்ஷணங்கள் உள்ளது என்பது தெரியவரும். ஆகையால் இரண்டும் ஒன்றுதான். இவ்வாறு மனனம் மூலம் மனதில் தோன்றும் ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரம் செய்துகொண்டு நானே பரப்ரஹ்மம் என்பதை உறுதிப் படுத்திக்கொள்ளவேண்டும். சிந்தனம் செய்வது மனதின் கார்யமாதலால் ப்ரஹ்மத்தைச் சிந்திக்கும்படி மனதிற்கு உபதேசம் செய்கிருர். (2)

(அ) மனனத்தைக் கூறிவிட்டு விபரீதத் தோற்றங்கள் ஏற்படாமல் இருக்க நிதித்யாஸனத்தை உபதேசிக்கிருர்:—

**अहमेव परं ब्रह्म न चाहं ब्रह्मणः पृथक् ।**
**इत्येवं समुपासीत ब्राह्मणो ब्रह्मणि स्थितः ॥ ३ ॥**

அஹமேவ பரம் ப்ரஹ்ம ந சாஹம் ப்ரஹ்மண: ப்ருதக் ।
இத்யேவம் ஸமுபாஸீத ப்ராஹ்மணோ ப்ரஹ்மணி ஸ்தித: ॥

**अहं** - நான், **परं ब्रह्म एव** - பரப்ரஹ்மம்தான். **अहं**-நான், **ब्रह्मणः** - ப்ரஹ்மத்தைக் காட்டிலும், **पृथक्** - வேருக, **न च** - இல்லை, **इति एवं** - என்று இவ்வாறு, **ब्राह्मणः** - பிராஹ்மணன், **ब्रह्मणि स्थितः** - ப்ரஹ்மஸ்வரூபத்தில் இருந்துகொண்டு, **समुपासीत** - தியானம் செய்யவேண்டும்.

குடத்திற்கும் மண்ணுக்கும் பேதம் அபேதம் இரண்டும் உண்டு என்று மற்ற சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. அம்மாதிரி பேதாபேதம் ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் கிடையாது, அபேதம் மட்டும்தான், கொஞ்சம்கூட பேதம் கிடையாது என்பதைக் காட்டுவதற்குத்தான் முதலில் நான் ப்ரஹ்மம் என்று கூறிவிட்டு அத்துடன் நிற்காமல் நான் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறு அல்ல என்று தனியாகக் கூறுகிறார். அல்லது 'நான் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறு அல்ல' என்பதை 'நான் பரப்ரஹ்மம்' என்பதன் வியாக்யானமாகக் கொள்ளலாம். அபேதம் என்பதற்கே வேற்றுமையில்லை என்பதுதான் பொருள். ஜீவன் ப்ரஹ்மம் என்று இரண்டு வஸ்துக்கள் இருந்து இரண்டும் ஒன்றாய் விட்டதாக எண்ணக்கூடாது. வஸ்து ஒன்றுதான். அக்ஞானத்தால் ப்ரஹ்மம் மறைந்து ஜீவனாகத்தோன்றியது. அக்ஞானம் நீங்கியதும் ஜீவஸ்வரூபம் மறைந்து ப்ரஹ்ம ஸ்வரூபம் விளங்குகிறது. வேறு ஒரு பொருளும் மனதில் தோன்றாமல், ப்ரஹ்மஸ்வரூபமே இடைவிடாமல் எப்பொழுதும் மனதில் தோன்றும்படியாக தியானம் செய்யவேண்டும். இடைவிடாமல் ஒரே பொருளை நினைப்பதற்குத்தான் தியானம் என்று பெயர். இந்த நிலையை அடைந்தவனுக்குத்தான் ப்ராஹ்மண்யம் பூர்ணமாகிறது. 'अथ ब्राह्मणः' (அத ப்ராஹ்மண:) (பிரு. 3-5) என்று உபநிஷத் இவனை பிரஹ்மணன் என்று கூறுகிறது. ப்ராஹ்மண்யம் பெற்றதின் பயன் இப்பொழுதுதான் நிறைவேறுகிறது. (3)

(அ) ப்ரஹ்மத்தின் நிலையைக் கூறுகிறார்:—

**सर्वोपाधिविनिर्मुक्तं चैतन्यं च निरन्तरम् ।**
**तद्ब्रह्माहमिति ज्ञात्वा कथं वर्णाश्रमी भवेत् ॥ ४ ॥**

ஸர்வோபாதிவிநிர்முக்தம் சைதந்யம் ச நிரந்தரம் ।
தத் ப்ரஹ்மாஹமிதி ஞாத்வா கதம் வர்ணாச்ரமீ பவேத் ॥

**सर्वोपाधिविनिर्मुक्तं** - எல்லா உபாதிகளிலிருந்தும் விடுபட்டதும், **चैतन्यं** - சைதன்ய ஸ்வரூபமானதும், **निरन्तरं**- இடைவெளியில்லாததுமான, **तत्** - அந்த, **ब्रह्म** - ப்ரஹ்மம், **अहं** - நான், **इति ज्ञात्वा** - என்று அறிந்துவிட்டு, **वर्णाश्रमी** - வர்ணமுள்ளவனுகவும் ஆச்ரமமுள்ளவனுகவும், **कथं**-எப்படி, **भवेत्** - இருப்பான் ?

பிராஹ்மண்யம் முதலான வர்ணங்களும், ப்ரஹ்மசர்யம் முதலான ஆச்ரமங்களும் சரீரத்தையொட்டி ஏற்பட்டவை. எவன் அபிமானத்துடன் சரீராதிகளை நான் என்று எண்ணிக்கொள்கிருனே, அவனைத்தான் பிராஹ்மணன் என்றும் ப்ரஹ்மசாரி என்றும் கூறலாம். சாஸ்திரத்தில் வர்ணங்களுக்கும் ஆச்ரமங்களுக்கும் விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகள் எல்லாம் இவர்களுக்கு உண்டு. அதன்படி நடந்தால் புண்யமும், மீறி நடந்தால் பாபமும், துன்பமும் ஏற்படும். எல்லாவித அபிமானத்தையும் துறந்து, சரீரம் முதலான எல்லா உபாதிகளிலிருந்தும் தன்னை வேறுபடுத்தி எங்கும் நிறைந்த சுத்த சைதன்ய ஸ்வரூபமான ப்ரஹ்மமாக பார்ப்பவன் வர்ணியாகவோ ஆச்ரமியாகவோ ஆக மாட்டான். அவனுக்கு முன்கூறிய கட்டுப்பாடுகள் கிடையாது. நற்கருமங்களைச் செய்வதால் நன்மையோ, தீவினைகளைச் செய்வதால் தீமையோ அவனுக்குக் கிடையாது. அவன் எந்தக் காரியங்களைச் செய்தபோதிலும் அத்துடன் ஸம்பந்தமில்லாததால் அவனுடைய ஞானநிலைக்கு ஒரு குறைவும் ஏற்படாது. இதே விஷயத்தை பிருஹதாரண்யக உபநிஷத்தில் கஹோளப்ராஹ்மணத்தில் (3–5) **स ब्राह्मणः केन स्यात्? येन स्यात् तेन ईदृश एव** (ஸ ப்ராஹ்மண: கேந ஸ்யாத் யேந ஸ்யாத் தேந ஈத்ருஶ ஏவ—அந்த ப்ரஹ்ம ஞானி எவ்விதச் செய்கையுடன் இருப்பான்? எந்தவித ஆசாரத்துடனிருந்தாலும் அவன் ப்ரஹ்மஞானியே) என்று கூறப்பட்டிருக்கிறது. ஞானியும் பழைய வாஸனையை அனுஸரித்து நல்வழியில்தான் செல்வான் என்று அங்கு பாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது. (4)

(அ) ஞானியின் ப்ரஹ்மானந்த நிலையை மாற்ற தேவர்களுக்கும் சக்தி கிடையாது என்பதையும் ஞானம் ஏற்படாதவரை இவன் தேவர்களுக்கு அடிமை என்பதையும் இரு சுலோகங்களால் காட்டுகிறார் :—

अहं ब्रह्मास्मि यो वेद स सर्वं भवति त्विदम् ।
नाभूत्या ईशते देवास्तेषामात्मा भवेद्धि सः ॥ ५ ॥
अन्योऽसावहमन्योऽस्मीत्युपास्ते योऽन्यदेवताम् ।
न स वेद नरो ब्रह्म स देवानां यथा पशुः ॥ ६ ॥

அஹம் ப்ரஹ்மாஸ்மி யோ வேத ஸ ஸர்வம் பவதி த்விதம் ।
நாபூத்யா ஈசதே தேவாஸ்தேஷாமாத்மா பவேத்தி ஸ: ॥
அந்யோऽஸாவஹமந்யோऽஸ்மீத்யுபாஸ்தே
யோऽந்யதேவதாம் ।
ந ஸ வேத நரோ ப்ரஹ்ம ஸ தேவாநாம் யதா பசு: ॥

अहं - நான், ब्रह्म - ப்ரஹ்மமாக, अस्मि - இருக்கிறேன் (என்று) यः - எவன், वेद - அறிந்து கொள்கிறானோ सः-அவன் इदं सर्वं - இது எல்லாமாகவும் भवति - ஆகிறான். देवाः - தேவர்கள் अभूत्यै - (அவன்) ஞானபலனை அடையாமலிருக்கும்படி செய்ய न ईशते - திறமையற்றவர்கள். हि - ஏனெனில், सः - அவன், तेषां-அந்த தேவர்களுக்கு, आत्मा- ஆத்மாவாக, भवेत् - ஆய்விடுவான்.

असौ - அந்த தேவர், अन्यः - (என்னைக்காட்டிலும்) வேறானவர், अहं - நான், अन्यः - (அவரைக்காட்டிலும்) வேறாக, अस्मि - இருக்கிறேன், इति - என்று, यः - எவன், अन्यदेवताम् - தன்னைக்காட்டிலும் வேறான தேவதையை, उपास्ते - ஆராதிக்கிறானோ, स नरः - அந்த மனிதன், ब्रह्म - பிரஹ்மத்தை, न वेद - அறியமாட்டான். सः - அவன், देवानां - தேவர்களுக்கு, यथा पशुः - பசுபோல இருப்பான்.

பிருஹதாரண்யகம் முதல் அத்யாயம் 4வது பிராஹ்மணத்திலுள்ள மந்திரத்தின் கருத்து இந்த இரு சுலோகங்களில் காட்டப்படுகிறது. அதாவது: ஒவ்வொரு மனிதனும்

தேவர்களுக்குக் கடன்பட்டே பிறக்கிருன். இந்தக்கடனை, தேவர்களைக்குறித்து யாகம் செய்வதாலும், பூஜை செய்வதாலும் தீர்க்கவேண்டும். யாகத்தில் தேவர்களைக் குறித்து ஹவிஸ்ஸைக் கொடுப்பதாலும், அவர்களைப் பூஜிப்பதாலும் அவர்களுக்கு போகத்தையும் திருப்தியையும் உண்டு பண்ணுகிருன். இது மனிதனின் கடமை. ஸந்தோஷம் அடைந்த அவர்கள் இவனுக்கு போகத்தை அருளுகின்றனர். தேவர்களுக்கு பிரீதி ஏற்படும்படி நடந்து கொள்ளாவிட்டால் கோபம் அடைந்து இடைஞ்சல் செய்வார்கள். ஆரம்பித்த காரியம் நிறைவேருது. செய்த காரியத்தின் பலனும் கிட்டாது. ஆகவே மனிதன் தேவர்கள் விஷயத்தில் பசுவின் நிலையைத்தான் அடைகிருன். பசுவானது தன்னை வளர்க்கும் யஜமானனுக்கு பாலைக்கொடுத்து போகத்தை உண்டுபண்ணுகிறது. அவனும் ஸந்தோஷம் கொண்டு அதற்கு உணவும், மற்றும் சௌகர்யங்களும் செய்து கொடுக்கிருன். அதிலும் ஒரே யாகத்தில் பல தேவதைகளுக்கு ஹவிஸ்ஸைக் கொடுப்பதால் ஒவ்வொரு மனிதனும் அநேக தேவதைகளுடைய பசுவாக ஆகின்ருன். ப்ரஹ்மஞானம் பெருமல் அக்ஞானத்தால் தன்னை வேருகவும் தேவதையை வேருகவும் எண்ணிக்கொண்டிருக்கும்வரை இந்தப் பசுவின் நிலை மனிதனுக்கு நீங்காது.

இவர்களில் எவனுவது ஒருவன் ஸர்வஸங்க பரித்யாகம் செய்து ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்து கொண்டு ஞானமார்க்கத்தில் செல்வானே ஆகில் பின்னல் அவன் யாகம் செய்யப்போவதில்லை. அவனிடமிருந்து தேவர்களுக்கு போகம் கிடைக்காது. இது தேவர்களுக்குப் பிடித்தமானது அல்ல. இதற்கு இடம் கொடுக்கமாட்டார்கள். எத்தனையோ இடையூறுகளைச் செய்வார்கள். நூற்றுக் கணக்கான பசுக்களை உடைய ஒரு மனிதன் தன்னைவிட்டு ஒரு பசுகூட பிரிந்து செல்வதை விரும்பமாட்டான். அப்படியிருக்க பல தேவர்களுக்கு போகத்தைக்கொடுத்துக் கொண்டிருக்கும் மனிதன் தங்களைவிட்டுப் பிரிந்து

செல்வதை அவர்கள் பொறுத்துக்கொண்டிருப்பார்களா ? எத்தனையோ இடையூறுகள் செய்து போகவொட்டாமல் தடுப்பார்கள்.

ஆனாலும் இந்த நிலையில் ப்ரஹ்மஞானம் இல்லாததால் பேதபுத்தி இருக்கும். ஸுகதுக்கங்கள் மாறி மாறி வரும். சாச்வதமான ஆனந்தம் இருக்காது. இதுவும் பந்தநிலை தான். எப்படியும் இதை விட்டு மேலே செல்லவேண்டும். ஆகையால் சிரத்தையுடனும் பக்தியுடனும் தேவர்களை ஆராதித்து அவர்களுக்கு பிரீதியை உண்டுபண்ணி அவர்களிடமே ஞானம் கிடைக்க அநுக்ரஹிக்கும்படி பிரார்த்திக்க வேண்டும். வேறு பலனைக் கேட்கக்கூடாது. அவர்களும் பிரீதியுடன், இடையூறு செய்யாமல் ஒத்தாசை புரிவார்கள். ஞானம் கிடைக்கும்வரை தேவதைகளின் அநுக்ரஹத்தை பிரார்த்திக்கவேண்டும். சிரத்தையுடனும் தேவதானுக்ரஹத்துடனும் தீவ்ரமான முயற்சிசெய்து ஞானவழியில் சென்று குருவின் அநுக்ரஹத்தால் ஞானத்தை அடைந்து விட்டால் அதன்பின் இவனை தேவர்கள் ஒன்றும் செய்ய முடியாது. இடையூறும் செய்யமுடியாது. ஞானத்தின் பலனை உடனே அடைந்தே தீருவான். யாரும் தடுக்க முடியாது. கர்மாக்களைச் செய்த உடன் பலன் கிடைப்பதில்லை. பின்னால்தான் கிடைக்கும். அங்கு தேவர்கள் விக்நம் செய்யக்கூடும். ஸூர்ய வெளிச்சத்தில் கண்ணைத் திறந்து பார்த்தவுடன் எதிரிலுள்ள பொருள் உடனே விளங்குவதுபோல ஞானம் வந்தவுடனேயே அக்ஞானம் விலகி ப்ரஹ்மாத்மபாவம் ஏற்பட்டுவிடுகிறபடியால் இங்கு விக்நம் செய்வதற்கு இடமில்லை. மேலும் தேவர்களையும் தன் ஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானியிடம் அவர்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள். (5–6)

(அ) ஞானியின் அநுபவத்தைக் காட்டுகிறார்:—

अहमात्मा न चान्योऽस्मि ब्रह्मैवाहं न शोकभाक् ।
सच्चिदानन्दरूपोऽहं नित्यमुक्तस्वभाववान् ॥ ७ ॥

அஹமாத்மா ந சாந்யோஸ்மி ப்ரஹ்மைவாஹம்
ந ஶோகபாக் ।
ஸச்சிதானந்தரூபோऽஹம் நித்யமுக்தஸ்வபாவவான் ॥

**अहं** - நான், **आत्मा** - பிரத்யகாத்மவஸ்து, **अन्यः**-வேருக, **न चास्मि** - இல்லை. **अहं** - நான், **ब्रह्मैव** - பிரஹ்மமே, **न शोकभाक्** - சோகத்தை அடைபவனல்ல. **अहं** - நான், **सच्चिदानन्दरूपः** - ஸச்சிதானந்தஸ்வரூபி, **नित्यमुक्तस्वभाववान्** - எப்பொழுதும் விடுபட்ட ஸ்வரூபமுள்ளவன்.

சரீராதிகளை நான் என்று எண்ணும்வரைதான் இஷ்டமான பொருள் தன்னை விட்டுப் பிரியும்பொழுது சோகம் ஏற்படுகிறது. எல்லாமாக விளங்கும் ஸச்சிதானந்த ப்ரஹ்மம் நான் என்ற ஞானம் ஏற்பட்டுவிட்டால் தன்னைத்தவிற வேறு பொருளே இல்லாததால் சோகத்திற்கு இடமில்லை. மேலும் ஸம்ஸார பந்தம் எல்லாம் உண்மையில் அஸங்கமான ஆத்மாவிற்குக் கிடையாது. அது மனத்திற்குத்தான். மனத்துடன் ஒன்ருகச் சேர்ந்திருப்பதால் அக்ஞானத்தால் ஆத்மாவிற்கும் பந்தமிருப்பதாக எண்ணி ஞானம் வந்தவுடன் பந்தம் நீங்கி முக்தி ஏற்பட்டதாக நினைக்கிருன். அக்ஞானத்தால் இவன் நினைப்பதைத் தவிற உண்மையில் ஆத்மாவில் பந்தமோ, மோக்ஷமோ ஒன்றும் கிடையாது. அது நித்யமுக்தவஸ்து. (7)

(அ) ஞானிக்கு புண்யபாப ஸம்பந்தம் கிடையாது என்று கூறுகிருர் :—

आत्मानं सततं ब्रह्म संभाव्य विहरन्ति ये ।
न तेषां दुष्कृतं किंचिद्दुष्कृतोत्था न चापदः ॥ ८ ॥
आत्मानं सततं ब्रह्म संभाव्य विहरेत्सुखम् ॥ ९ ॥

ஆத்மாநம் ஸததம் ப்ரஹ்ம ஸம்பாவ்ய விஹரந்தி யே ।
ந தேஷாம் துஷ்க்ருதம் கிஞ்சித் துஷ்க்ருதோத்தா ந சாபதः ।
ஆத்மாநம் ஸததம் ப்ரஹ்ம ஸம்பாவ்ய விஹரேத் ஸுகம் ।

**सततं** - எப்பொழுதும், **आत्मानं** - தன்னை, **ब्रह्म** - ப்ரஹ்மமாக, **संभाव्य** - எண்ணி, **ये** - எவர்கள், **विहरन्ति** - ஸஞ்சரிக்கின்றனரோ, **तेषां** - அவர்களுக்கு, **दुष्कृतं** - பாபம், **किंचित्** - கொஞ்சமும், **न** - கிடையாது. **दुष्कृतोत्थाः** - பாபங்களிலிருந்து உண்டாகும், **आपदः च** - துன்பங்களும், **न** - கிடையாது.

(ஆகையால்) **आत्मानं** - தன்னை, **सततं** - எப்பொழுதும், **ब्रह्म** - ப்ரஹ்மஸ்வரூபமாக, **संभाव्य** - எண்ணி, **सुखं**-ஆனந்தமாக, **विहरेत्** - ஸஞ்சரிக்கவேண்டும்.

இந்த சுலோகத்தில் ஜீவன்முக்தனிடம் ஆகாமிகர்மா ஒட்டுவதில்லை என்பதைக் கூறுகிருர். சரீராதிகளில் அபிமானம் கொண்டு ‘ நான் செய்கிறேன் ’ என்ற எண்ணத்துடன் செய்பவனுக்குத்தான் அவன் செய்யும் கர்மாக்களால் பாபம் ஏற்பட்டு அதன்மூலம் துன்பம் ஏற்படுகிறது. ஞானம் அடைந்துள்ள ஜீவன்முக்தனுக்கு சரீராபிமானம் இல்லை. ப்ரஹ்மத்தையே தன் ஸ்வரூபமாகப் பார்க்கிருன். சரீரம் செய்யும் காரியத்தில் நான் செய்கிறேன் என்ற எண்ணம் இல்லை. ஆதலால் அவன் உலகில் ஸஞ்சரிக்கும்பொழுது ஏதாவது சாஸ்திர விருத்தமான காரியம் செய்தபோதிலும் அதனுல் அவனுக்குப் பாபம் ஏற்படுவதில்லை. பாபபலனை துன்பமும் அவனுக்குக் கிடையாது. இந்த சுலோகத்தில் **दुष्कृतं** (துஷ்க்ருதம்) என்பதால் புண்யத்தையும் **आपदः** (ஆபத:) என்பதால் ஸம்பத்தையும் பொருளாகக்கொள்ள வேண்டும். ப்ரஹ்மானந்தத்தை அநுபவிக்கும் ஞானிக்கு வைஷயிகஸுகமும் துன்பம்தான். அதற்கு ஸாதனமான புண்யமும் பாபமாகத்தான் ஆகும். ஞானம் அடைந்த பிறகு செய்யும் கர்மாக்களால் இன்பமோ துன்பமோ ஒன்றும் ஏற்படுவதில்லை என்று கருத்து. (8–9)

(அ) ப்ரஹ்மத்யானத்தின் பெருமையைக் காட்டுகிருர்:-

**क्षणं ब्रह्माहमस्मीति यः कुर्यादात्मचिन्तनम् ।**
**तन्महापातकं हन्ति तमः सूर्योदयो यथा ॥ १० ॥**

க்ஷணம் ப்ரஹ்மாஹமஸ்மீதி ய: குர்யாதாத்மசிந்தனம் ।
தன் மஹாபாதகம் ஹந்தி தம: ஸூர்யோதயோ யதா ॥

**अहं** - நான், **ब्रह्म अस्मि** - ப்ரஹ்மமாக இருக்கிறேன். **इति** - என்று, **क्षणं** - சிறிது நேரம், **यः** - எவனொருவன், **आत्मचिन्तनं** - ஆத்மத்யானத்தை, **कुर्यात्** - செய்வானேயாகில், **सूर्योदयः** - ஸூர்யனின் உதயம், **यथा तमः** இருளை நீக்குவது போல், **तत्** - அந்த ப்ரஹ்மத்யானம், **महापातकं** - மஹா பாபத்தை, **हन्ति** - அழித்துவிடுகிறது.

ஏதோ ப்ரதிபந்தக வசத்தால் ஞானம் வராதபோதிலும் சிறிது நேரமாவது உலகத்தையும் தன்னையும் மறந்து முன் சொன்ன விதமாக நான் ப்ரஹ்மஸ்வரூபம் என்று ஆத்ம ஸ்வரூபத்தை தியானம் செய்தால் இடைஞ்சலாக உள்ள மஹாபாபம் விலகிவிடும். பிறகு ஞானமும் ஏற்படும். (10)

(அ) ஜீவப்ரஹ்மைக்யத்தைக் கூறிவிட்டு அத்வைத ஸித்திக்காக பிரபஞ்சஸிருஷ்டி பிரளயங்களைக் கூறுகிறார்:—

**अज्ञानाद्ब्रह्मणो जातमाकाशं बुद्बुदोपमम् ।**
**आकाशाद्वायुरुत्पन्नो वायोस्तेजस्ततः पयः ॥ ११ ॥**
**अद्भ्यश्च पृथिवी जाता ततो व्रीहियवादिकम् ।**
**पृथिव्यप्सु पयो वह्नौ वह्निर्वायौ नभस्यसौ ।**
**नभोऽप्यव्याकृते तच्च शुद्धे शुद्धोऽस्म्यहं हरिः ॥ १२ ॥**

அக்ஞானாத் ப்ரஹ்மணோ ஜாதமாகாஶம் புத்புதோபமம் ।
ஆகாஶாத் வாயுருத்பந்நோ வாயோஸ்தேஜஸ்தத: பய: ॥
அத்ப்யச்ச ப்ருதிவீ ஜாதா ததோ வ்ரீஹியவாதிகம் ।
ப்ருதிவ்யப்ஸு பயோ வஹ்நௌ வஹ்நிர் வாயௌ நப ஸ்யஸௌ ।
நபோப்யவ்யாக்ருதே தச்ச ஶுத்தே ஶுத்தோஸ்ம்யஹம் ஹரி: ॥

**ब्रह्मणः** - ப்ரஹ்மத்திலிருந்து, **अज्ञानात्** - மாயையால், **बुद्बुदोपमं** - நீர்க்குமிழிக்கு ஒப்பான, **आकाशं** - ஆகாசம், **जातं** - உண்டானது, **आकाशात्** - ஆகாசத்திலிருந்து, **वायुः** - வாயு, **उत्पन्नः** - உண்டானது. **वायोः** - வாயுவிலிருந்து, **तेजः** - தேஜஸ்ஸும், **ततः**-அதிலிருந்து, **पयः**-ஜலமும் (உண்டானது) **अद्भ्यः** - ஜலத்திலிருந்து, **पृथिवी च** - பிருதிவியும், **जाता** - உண்டானது. **ततः**-அதிலிருந்து, **व्रीहियवादिकं**-நெல், யவம் முதலானவை (உண்டானது).

**पृथिवी** - பூமி, **अप्सु** - ஜலத்திலும், **पयः** - ஜலம், **वह्नौ** - தேஜஸ்ஸிலும், **वह्निः** - தேஜஸ், **वायौ** - வாயுவிலும், **असौ** - அந்த வாயு, **नभसि** - ஆகாசத்திலும், **नभोऽपि** - ஆகாசமும், **अव्याकृते** - அவ்யாக்ருதம் என்ற மாயையிலும், **तच्च**-அதுவும், **शुद्धे** - சுத்தமான ப்ரஹ்மத்திலும் (லயம் அடைகிறது) **शुद्धः**- (கடைசியில் மிஞ்சிய) சுத்தமான, **हरिः** - ஹரியாக, **अहं** - நான், **अस्मि** - இருக்கிறேன்.

இதுவரையிலும் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒரே தத்வம்தான் என்பது கூறப்பட்டது. இதனுல் சேதனம் ஒன்றுதான் என்பது தெரியவந்தது. இதனுல் மட்டும் அத்வைத நிலேயோ, அபயமோ, பரமானந்த நிலேயோ பூர்ணமாக ஏற்படாது. ஜடபிரபஞ்சம் நம்மைக்காட்டிலும் வேருக இருக்கும்வரை நமக்கு பயம் விலகாது. அதற்காக பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை விளக்கிக் கூறுகிருர். பரமாத்ம ஸ்வரூபத்திலிருந்து மாயையால் முதலில் தோன்றியது ஆகாசம். பிறகு வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி என்ற முறையில் பிரபஞ்சம் உண்டாயிருக்கிறது. கடைசியில் பிருதிவி ஜலத்தில், ஜலம் தேஜஸ்ஸில், தேஜஸ் வாயுவில், வாயு ஆகாசத்தில், ஆகாசம் மாயையில், மாயை சுத்த பிரஹ்மத்தில் என்ற முறையில் லயத்தை அடைகிறது. ஆகவே பிரபஞ்சம் ப்ரஹ்மத்திலிருந்து உத்பத்தியாகி அதிலேயே லயமடைவதால் ப்ரஹ்மம் உபாதான காரணம் ஆகிறது. காரணத்தைக்காட்டிலும் காரியம் வேறு அல்ல.

நீரில் தோன்றும் குமிழி நீரிலேயே உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே மறைவதால் அது நீரைக்காட்டிலும் வேறு அல்ல. அதுபோல மாயையால் ப்ரஹ்மத்திலிருந்து தோன்றும் பிரபஞ்சமும் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு அல்ல. அந்த சுத்த ப்ரஹ்மம் நான்தான். ஆகையால் என்னைத்தவிற இரண்டாவது பொருள் சேதனமோ ஜடமோ ஒன்றும் உண்மையில் இல்லை. நான் அத்வைத வஸ்து. இவ்வித ஞானம் உள்ளவனுக்கு இரண்டாவது பொருள் இல்லாததால் பயம் ஏற்படாது. ப்ரஹ்மானந்த நிலையை அடைகிறான். (11–12)

(அ) விதிமுகமாகவும் நிஷேத முகமாகவும் ப்ரஹ்மாநு ஸந்தானம் செய்யும் முறையை ஐந்து சுலோகங்களால் காட்டுகிறார்: —

**अहं विष्णुरहं विष्णुरहं विष्णुरहं हरिः ।**
**कर्तृभोक्त्रादिकं सर्वं तदविद्योत्थमेव च ॥ १३ ॥**

அஹம் விஷ்ணுரஹம் விஷ்ணுரஹம் விஷ்ணுரஹம் ஹரி:
கர்த்ருபோக்த்ராதிகம் ஸர்வம் ததவித்யோத்தமேவ ச ॥

**अहं** - நான், **विष्णुः** - விஷ்ணு (எங்கும் நிறைந்தவன்) **अहं** - நான், **विष्णुः** - விஷ்ணு, **अहं** - நான், **विष्णुः** - விஷ்ணு, **अहं** - நான், **हरिः** - ஹரி, **कर्तृभोक्त्रादिकं सर्वं** - செய்கிறவன், அனுபவிக்கிறவன் என்பதெல்லாம், **तदविद्योत्थमेव** - அவனுடைய அவித்யையால் ஏற்பட்டதே.

விஷ்ணு என்றும் ஹரி என்றும் கூறப்படும் ப்ரஹ்மம் நான் தான் என்பதை மூன்றுதடவை கூறி உறுதிப்படுத்துகிறார். அவித்யையால் தன்னை ப்ரஹ்மஸ்வரூபமாகத் தெரிந்துகொள்ளாமல் கர்த்தாவாகவும் (காரியங்களைச் செய்பவனாகவும்) போக்தாவாகவும் (அதன் பயனை அநுபவிப்பவனாகவும்) அறியாமையால் எண்ணுகின்றனர். இவைகள் எல்லாம் புத்தியைச் சேர்ந்தவை. புத்தியுடன் ஒன்றாகி

அதையே நான் என்று எண்ணுவதால் இந்த விபரீத ஞானம் ஏற்பட்டிருக்கிறது. அக்ஞானம் நீங்கி புத்தியைக் காட்டிலும் வேருக தன்னை அறிந்தவன் கர்த்தாவாகவும் போக்தாவாக வும் எண்ணமாட்டான். அகண்ட ஸச்சிதானந்த ப்ரஹ்ம மாகவே நினைப்பான். (13)

अच्युतोऽहमनन्तोऽहं गोविन्दोऽहमहं हरिः ।
आनन्दोऽहमशेषोऽहमजोऽहममृतोऽस्म्यहम् ॥ १४ ॥

அச்யுதோஹமநந்தோஹம் கோவிந்தோஹமஹம் ஹரி: ।
ஆநந்தோஹமஶேஷோஹமஜோஹமம்ருதோஸ்ம்யஹம் ॥

**अहं** - நான், **अच्युतः** - அச்யுதன் (தன் நிலையிலிருந்து வழுவாதவன்) **अहं** - நான், **अनन्तः** - அனந்தன் (தேசம், காலம், வஸ்து என்ற மூன்று எல்லைகளும் அற்றவன்) **अहं** - நான், **गोविन्दः** - கோவிந்தன், **अहं** - நான், **हरिः** - ஹரி, **अहं** - நான், **आनन्दः** - ஆனந்தம், **अशेषः** - எல்லாம், **अहं** - நான், **अहं** - நான், **अजः** - பிறப்பு அற்றவன், **अहं** - நான், **अमृतः** - மரணம் இல்லாதவனுக **अस्मि** - இருக்கிறேன். (14)

नित्योऽहं निर्विकल्पोऽहं निराकारोऽहमव्ययः ।
सच्चिदानन्दरूपोऽहं पञ्चकोशातिगोऽस्म्यहम् ॥ १५ ॥

நித்யோஹம் நிர்விகல்போஹம் நிராகாரோஹமவ்யய: ।
ஸச்சிதானந்தரூபோஹம் பஞ்சகோஶாதிகோऽஸ்ம்யஹம் ॥

**अहं** – நான், **नित्यः** - பிறப்பு இறப்பு அற்றவன் (எப் பொழுதும் இருப்பவன்) **अहं** - நான், **निर्विकल्पः** - வேற்றுமை அற்றவன், **अहं** - நான், **निराकारः** - உருவமற்றவன். **अव्ययः** - குறைவு அற்றவன். **अहं** - நான், **सच्चिदानन्दरूपः** - ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாகவும் இருப்பவன். **अहं** - நான், **पञ्चकोशातिगः** - அன்னமயம், பிராணமயம், மனே மயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங் களுக்கும் அப்பாற்பட்டவனுக, **अस्मि** - இருக்கிறேன். (15)

अकर्ताऽहमभोक्ताऽहमसङ्गः परमेश्वरः ।
सदा मत्सन्निधानेन चेष्टते सर्वमिन्द्रियम् ॥ १६ ॥

அகர்தாஹம்போக்தாஹமஸங்க: பரமேச்வர: ।
ஸதா மத்ஸந்நிதாநேந சேஷ்டதே ஸர்வமிந்த்ரியம் ॥

**अहं** - நான், **अकर्ता**-(ஒன்றையும்) செய்யாதவன். **अहं**- நான், **अभोक्ता** - அநுபவியாதவன். (நான்) **असङ्गः** - ஒன்றிலும் ஒட்டாத, **परमेश्वरः** - பரமேசுவரன். **सदा** - எப்பொழுதும், **मत्सन्निधानेन** - நான் அருகில் இருப்பதால், **सर्वं इन्द्रियं** - எல்லா இந்திரியமும், **चेष्टते** - வேலை செய்கிறது.

ஒரு காரியத்தைச் செய்வதற்கும் அதன் பயனை அநுபவிப்பதற்கும் பிறவஸ்துவுடன் ஸம்பந்தம் இருக்க வேண்டும். ஆத்மா ஒரு வஸ்துவுடனும் ஸம்பந்தப்படாத தால் அது கர்த்தாவும் அல்ல, போக்தாவும் அல்ல. ஆனாலும் ஆத்மா இருப்பதால்தான் எல்லாம் அதனதன் வேலையைச் செய்கிறது. காந்தத்தின் அருகில் இரும்பு அசைவதுபோல் ஆத்ம ஸந்நிதியில் இந்திரியங்கள் வேலை செய்கின்றன. ஆத்ம சக்தியால்தான் கண் பார்க்கிறது, காது கேட்கிறது. மற்ற இந்திரியங்களும் அதனதன் வேலை களைச் செய்கின்றன. இதைக்கொண்டு ஆத்மாவே செய்வ தாகத் தவறுதலாக எண்ணி விடுகிறோம். காந்தம்போல ஆத்மா இருக்கிறது என்பதைத்தவிர இந்திரியங்களின் காரியங்களில் அதற்கு ஒருவித ஸம்பந்தமும் இல்லை. அது அஸங்கம். (16)

आदिमध्यान्तमुक्तोऽहं न बद्धोऽहं कदाचन ।
स्वभावनिर्मलः शुद्धः स एवाहं न संशयः ॥ १७ ॥

ஆதிமத்யாந்தமுக்தோஹம் ந பத்தோஹம் கதாசந ।
ஸ்வபாவ நிர்மல: ஶுத்த: ஸ ஏவாஹம் ந ஸம்ஶய: ॥

**अहं** - நான், **आदिमध्यान्तमुक्तः** - ஆதி, மத்யம், முடிவு மூன்றும் அற்றவன், **अहं** - நான், **कदाचन** - ஒருபொழுதும்,

**न बद्धः** - கட்டுப்பட்டவனில்லை. **अहं** - நான், **स्वभावनिर्मलः** - இயற்கையிலேயே அழுக்கு அற்றவனும், **शुद्धः** - பரிசுத்த னுமான, **स एव** - அந்த பரமாத்மாவே. **न संशयः** ஸந்தேஹ மில்லை. (17)

(அ) இதுவரை ப்ரஹ்ம ஸ்வரூபத்தை விளக்கி ஞானி ப்ரஹ்மானுஸந்தானம் செய்யும் முறையையும் காட்டினுர். இனி ஞானம் பெருதவனும் அந்த நிலையை அடைவதற்கு உபாயம் கூறுகிருர்:—

**ब्रह्मैवाहं न संसारी मुक्तोऽहमिति भावयेत् ।**
**अशक्नुवन्भावयितुं वाक्यमेतत्सदाऽभ्यसेत् ॥ १८ ॥**
**यदभ्यासेन तद्भावो भवेद्भ्रमरकीटवत् ।**
**अत्रापहाय सन्देहमभ्यसेत्कृतनिश्चयः ॥ १९ ॥**

ப்ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ முக்தோஹமிதி பாவயேத் ।
அஶக்நுவன் பாவயிதும் வாக்யமேதத் ஸதாப்யஸேத் ॥
யதப்யாஸேந தத்பாவோ பவேத் ப்ரமரகீடவத் ।
அத்ராபஹாய ஸந்தேஹம் அப்யஸேத் க்ருதநிச்சய: ॥

(ஞானம் பெருதவரும்) **अहं** - நான், **ब्रह्मैव** - ப்ரஹ்மமே, **न संसारी** - ஸம்ஸாரி அல்ல. **अहं** - நான், **मुक्तः** - (எல்லா பந்தங்களிலிருந்தும்) விடுபட்டவன், **इति** - என்று, **भावयेत्** - த்யானம் செய்யவேண்டும். **भावयितुं**-தியானம் செய்வதற்கு, **अशक्नुवन्** - ஸாமர்த்தியம் இல்லாதவன், **एतत् वाक्यं** - இந்த வாக்யத்தை, **सदा** - எப்பொழுதும், **अभ्यसेत्** - திருப்பித் திருப்பிச் சொல்லவேண்டும்.

**यत्** - ஏனெனில், **अभ्यासेन** - அப்யாஸம் செய்வதால், **भ्रमरकीटवत्** - குளவியால் கொட்டப்பட்ட புழுவுக்குப்போல், **तद्भावः**-அந்த ப்ரஹ்மபாவம், **भवेत्** - ஏற்படும். **अत्र**- இவ்விஷயத்தில், **सन्देहं** - ஸம்சயத்தை, **अपहाय** - விட்டு, **कृतनिश्चयः** - உறுதி செய்துகொண்டு, **अभ्यसेत्** - அப்யாஸம் செய்யவேண்டும்.

ஆரம்ப தசையில் அர்த்தாநுஸந்தானத்துடன் '**ब्रह्मैवाहं न संसारी मुक्तोहं**' (ப்ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ முக்தோऽஹம்) என்ற வாக்யத்தை எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கவேண்டும். இந்த பிரகரணம் முழுவதையுமே அடிக்கடி சொல்லலாம். பிறகு தன் ஸ்வரூபத்தை சரீரம் முதலியவைகளைக் காட்டிலும் வேருகவும் லௌகிக தர்மங்கள் ஒன்றும் தன்னிடம் இல்லாததாகவும் தான் ஒன்றிலும் ஸம்பந்தப்படாததாகவும் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கவேண்டும். இவ்விதம் அப்யாஸம் செய்துகொண்டு வந்தால் நிச்சயம் அதே நிலையை அடையலாம். இதில் சிறிதும் ஐயம் வேண்டாம். அடிக்கடி தன்னைக் கொட்ட வரும் குளவியை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருப்பதால் ஒரு புழு குளவியாகவே ஆய்விடுவதில்லையா? (18–19)

(அ) இவ்வித அப்யாஸத்தால் ஏற்படும் வேறு சில பலன்களைக் கூறுகிறுர் :—

**ध्यानयोगेन मासैकाद्ब्रह्महत्यां व्यपोहति ।**
**संवत्सरं सदाऽभ्यासात्सिद्ध्यष्टकमवाप्नुयात् ।**
**यावज्जीवं सदाऽभ्यासाज्जीवन्मुक्तो भवेद्यतिः ॥ २० ॥**

த்யாநயோகேந மாஸைகாத் ப்ரஹ்மஹத்யாம் வ்யபோஹதி ।
ஸம்வத்ஸரம் ஸதாப்யாஸாத் ஸித்யஷ்டகமவாப்நுயாத் ॥
யாவஜ்ஜீவம் ஸதாப்யாஸாத் ஜீவன்முக்தோ பவேத் யதி: ॥

**मासैकात्** - ஒருமாத காலம், **ध्यानयोगेन** - இம்மாதிரி த்யாநம் செய்வதால், **ब्रह्महत्यां** - ப்ரஹ்மஹத்தி என்ற பாபத்தை, **व्यपोहति** - போக்கடிக்கிருன், **संवत्सरं** - ஒரு வருஷகாலம், **सदा** - எப்பொழுதும், **अभ्यासात्** - அப்யாஸம் செய்வதால், **सिद्ध्यष्टकं** - எட்டு ஸித்திகளையும், **अवाप्नुयात्** - அடைவான். **यावज्जीवं**-உயிருள்ளவரை, **सदा**-எப்பொழுதும், **अभ्यासात्** - அப்யாஸம் செய்வதால் **यतिः** - யதியானவன், **जीवन्मुक्तः** - ஜீவன்முக்தனுக, **भवेत्** - ஆவான்,

சரீராதிகளைக் காட்டிலும் வேறுபட்டதாகவும், ப்ரஹ்ம ஸ்வரூபமாகவும், தியானம் செய்து வந்தால் ஒரு மாதத்தில் அவனிடமுள்ள ப்ரஹ்மஹத்தியோ, அதற்குச் சமமான மற்ற பாபங்களோ விலகிவிடும். பரிசுத்தனுகி விடுவான். மேலும் அப்யாஸம் செய்துவந்தால் அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்னும் எட்டு ஸித்திகளும் இவனுக்கு ஏற்பட்டுவிடும். அவைகளில் ஆசை கொள்ளாமல் மேலும் அப்யாஸம் செய்து வந்தால் ஞானத்திற்கு இடைஞ்சலாக உள்ள பாபங்களும், காமம் முதலான மனத்தின் தோஷங்களும் விலகி குருவின் உபதேசம் மனத்தில் பதிந்து அநுபவத்திற்கு வரும். நான் ப்ரஹ்மம் என்பதை நேரில் காண்பான். முக்தனுகவே ஆகிவிடுவான். (20)

(அ) 15வது சுலோகத்தில் '**पञ्चकोशातिगः**' (பஞ்ச கோசாதிக:) ஐந்து கோசங்களுக்கும் அப்பால்பட்டவன் என்று கூறியுள்ளதை விளக்கும் முறையில் சரீரத்தில் அடங்கியுள்ள பொருள் ஒவ்வொன்றும் ஆத்மாவல்ல என்பதை உபதேசிக்கிருர்: —

**नाहं देहो न च प्राणो नेन्द्रियाणि तथैव च ।**
**न मनोऽहं न बुद्धिश्च नैव चित्तमहंकृतिः ॥ २१ ॥**

**नाहं पृथ्वी न सलिलं न च वह्निस्तथाऽनिलः ।**
**न चाकाशो न शब्दश्च न च स्पर्शस्तथा रसः ॥ २२ ॥**

**नाहं गन्धो न रूपं च न मायाऽहं न संसृतिः ।**
**सदा साक्षिस्वरूपत्वाच्छिव एवास्मि केवलः ॥ २३ ॥**

நாஹம் தேஹோ ந ச ப்ராணோ நேந்த்ரியாணி ததைவ ச ।
ந மனோஹம் ந புத்திச்ச நைவ சித்தமஹங்க்ருதி: ॥

நாஹம் ப்ருத்வீ ந ஸலிலம் ந ச வஹ்நிஸ்ததாநில: ।
ந சாகாசோ ந சப்தச்ச ந ச ஸ்பர்சஸ்ததா ரஸ: ॥

நாஹம் கந்தோ ந ரூபம் ச ந மாயாஹம் ந ஸம்ஸ்ருதி: |
ஸதா ஸாக்ஷிஸ்வரூபத்வாத் ஶிவ ஏவாஸ்மி கேவல: ||

**अहं** – நான், **न देहः** - (ஸ்தூல) சரீரமல்ல. **न च प्राणः** - ப்ராணவாயுவும் அல்ல. **तथैव** - அப்படியே, **नेन्द्रियाणि च** - இந்திரியங்களும் அல்ல. **अहं** – நான், **न मनः**–மனம் அல்ல. **न बुद्धिश्च** – புத்தியும் அல்ல. **नैव चित्तं अहंकृतिः** – சித்தமும் அல்ல, அஹங்காரமும் அல்ல. **अहं** – நான், **न पृथ्वी** – பிருதிவி என்னும் பூதம் அல்ல. **न सलिलं** - ஜலம் அல்ல. **न च वह्निः** - தேஜஸ்ஸும் அல்ல. **तथा** – அவ்விதமே, **(न) अनिलः** – வாயு அல்ல. **न च आकाशः** - ஆகாசமும் அல்ல. **न शब्दश्च** – சப்தமும் அல்ல. **न च स्पर्शः** - ஸ்பர்சமும் அல்ல. **तथा** – அவ்வாறே, **रसः (न)** – ரஸமும் அல்ல. **अहं** – நான், **न गन्धः** – வாஸனை அல்ல. **न रूपं च** – ரூபமும் அல்ல. **अहं** – நான், **न माया** – மாயை அல்ல. **न संसृतिः** – ஸம்ஸாரம் அல்ல. **सदा** – எப்பொழுதும், **साक्षिस्वरूपत्वात्** - ஸாக்ஷி ஸ்வரூபமாயிருப்பதால், **केवलः** – தனிப்பட்ட, **शिव एव** – சிவஸ்வரூபமாகவே, **अस्मि** – இருக்கிறேன்.

இந்த மூன்று சுலோகங்களில், அக்ஞானத்தால் 'நான்' என்று எண்ணிக்கொண்டிருக்கும் பொருள்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் காட்டி ஆத்மா அல்ல என்று விலக்கி கடைசியில் மிஞ்சுகின்ற பரப்ரஹ்மமே ஆத்மா என்று உபதேசிக்கிறார். ஸாதாரணமாக எல்லோரும் சரீரத்தையே நான் என்று வியவஹாரம் செய்கிறோம். இந்த சரீரத்தை அன்னமயம், பிராணமயம், மனோமயம் விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்று ஐந்து கோசங்களாக பிரித்திருக்கிறார்கள். இதையே ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என்று மூன்று விதமாகவும் பிரித்துக் கூறுவதுண்டு. அன்னத்திலிருந்து உண்டாகி அன்னத்தாலேயே வளர்ந்து முடிவில் அழிந்துபோகும் ரக்தம், மாம்ஸம், அஸ்தி, தோல் முதலியவைகள் அடங்கிய ஸ்தூல சரீரம் தான் அன்னமயகோசம் எனப்படும். அன்னமயு

கோசம்தான் ஸ்தூல சரீரம் ஆகும். வாக், கை, கால், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும், பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து பிராணன்களும் சேர்ந்து பிராணமய கோசம் எனப்படும். கண், காது, மூக்கு, நாக்கு த்வக் என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் மனமும் சேர்ந்து மனோமயகோசம் எனப்படும். ஞானேந்திரியங்களுடன் கூடிய புத்தி விக்ஞானமய கோசமாகும். இந்த மூன்று கோசங்களும் சேர்ந்து ஸூக்ஷ்ம சரீரம் என்று பெயர். இந்த இரண்டு சரீரங்களிலும் பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்மாம்சமும் ஸ்தூலாம்சமும் சேர்ந்திருக்கிறது. அவித்யை காரண சரீரம். அதுவே ஆனந்தமயகோசம். ஒரே அந்தக்கரணம், விஷயத்தைப் பற்றின எண்ணம் முதலில் ஸாமான்யமாக ஏற்படும்பொழுது மனம் என்றும், தீர்மானிக்கும்பொழுது புத்தி என்றும் அபிமானம் கொள்ளும் பொழுது அஹங்காரம் என்றும், தன்னுடையதாக நினைக்கும் பொழுது சித்தம் என்றும் பெயர் அடைகிறது. ஐந்து கோசங்களிலும் மூன்று சரீரங்களிலும் உள்ள ஒவ்வொன்றையும், நான் தனியாக இருந்துகொண்டு அறிந்துகொள்கிறேன். என்னால் அவை அறியப்படுகின்றன. இவைகளையும் இவை செய்யும் காரியங்களையும் ஸாக்ஷியாக இருந்து பார்க்கிறேன். அறிபவனைக்காட்டிலும் அறியப்படும் பொருள் வேறாகத் தான் இருக்கமுடியும். ஆகவே இவைகளில் ஒன்றும் நான் அல்ல. நான் இவைகளைக்காட்டிலும் வேறு. உலகில் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் 'நான் அல்ல' என்று விலக்கிவிட்டால் கடைசியில் மிஞ்சுவது '**शान्तं शिवमद्वैतं**' (ஶாந்தம் ஶிவம் அத்வைதம்) என்று மாண்டூக்ய உபநிஷத்தில் காட்டிய பரிசுத்தமான சைதன்யமே. அதுவே நான். '**तदेकोऽवशिष्टः शिवः केवलोहं**' (ததேகோவஶிஷ்டஃ ஶிவஃ கேவலோஹம்) என்று தஶஶ்லோகியில் கூறியமுறை இங்கும் காணப்படுகிறது. (21-23)

(அ) தன்னையே ஜகத்காரண வஸ்துவாக அநுஸந்தானம் செய்கிறார் :—

मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।
मयि सर्वं लयं याति तद्ब्रह्मास्म्यहमद्वयम् ॥ २४ ॥

மய்யேவ ஸகலம் ஜாதம் மயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ।
மயி ஸர்வம் லயம் யாதி தத் ப்ரஹ்மாஸ்ம்யஹமத்வயம் ॥

**सकलं** - எல்லாம், **मय्येव** என்னிடத்திலேயே, **जातं** - உண்டானது. **सर्वं** - எல்லாம், **मयि** - என்னிடம், **प्रतिष्ठितम्** - நிலைத்து நிற்கிறது. **मयि** - என்னிடம், **सर्वं** - எல்லாம், **लयं याति** - மறைந்துபோகிறது. **तत्** - ஆகையால், **अहं** - நான், **अद्वयं** - அத்விதீயமான, **ब्रह्मास्मि** - ப்ரஹ்மமாக இருக்கிறேன்.

முன்னால் ப்ரஹ்மத்திலிருந்து ஆகாசம் முதலான பிரபஞ்சம் முழுவதும் உண்டாவதையும் ப்ரஹ்மத்திலேயே மறைந்துபோவதையும் குறிப்பிட்டார். அந்த ப்ரஹ்மமே நான் என்றும், வேறான சரீராதிகள் நான் அல்ல என்றும் எப்பொழுதும் அநுஸந்தானம் செய்து ப்ரஹ்மாநுபவத்தை யடைந்த ஞானி தன்னையே காரண ப்ரஹ்மமாக நினைப்பதால் தன்னிடமிருந்தே பிரபஞ்சம் உண்டாவதாகவும் தன்னிடமே நிலைத்து, முடிவில் தன்னிடமே ஒடுங்குவதாகவும் காண்கிறான்.

ஆகையினால் எல்லாவற்றிற்கும் ஆத்மாவே காரணம். காரணத்தைக்காட்டிலும் கார்யம் வேறு அல்ல என்பதை உலகில் பார்த்திருக்கிறோம். மண்ணிலே தோன்றி மண்ணிலே இருந்து மண்ணிலே மறையும் குடம் மண்ணைக் காட்டிலும் வேறு இல்லை அல்லவா. பெயரும் உருவமும் தான் புதிதாக ஏற்பட்டதே தவிற அதே மண்தான் குடமாக காக்ஷியளிக்கிறது. அதுபோல ஆத்மாவில் தோன்றி, அதிலேயே இருந்து ஆத்மாவிலேயே மறையும் பிரபஞ்சமும் ஆத்மாவைத்தவிற வேறு அல்ல. ஆத்மாதான் ப்ரஹ்மம். வியவஹாரதசையில் எத்தனையோ வேற்றுமைகள் இருந்த போதிலும் அத்வைத ப்ரஹ்மம்தான் உண்மையானது. (24)

(அ) கடைசியாக ப்ரஹ்மஸ்வரூபாநுசிந்தன முறையை சுருக்கிக் காட்டுகிறார் :—

सर्वज्ञोऽहमनन्तोऽहं सर्वेशः सर्वशक्तिमान् ।
आनन्दः सत्यबोधोऽहमिति ब्रह्मानुचिन्तनम् ॥ २५ ॥

ஸர்வக்ஞோஹமநந்தோஹம் ஸர்வேசஃ ஸர்வசக்திமான் ।
ஆநந்த: ஸத்யபோதோஹம் இதி ப்ரஹ்மாநுசிந்தனம் ॥

अहं – நான், सर्वज्ञः - எல்லாம் அறிந்தவன், अहं-நான், अनन्तः - பரிச்சேதம் (எல்லை) அற்றவன், सर्वेशः - எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவன். सर्वशक्तिमान् - எல்லாச் சக்திகளுடன் கூடியவன். अहं - நான், आनन्दः-ஆனந்தரூபி, सत्यबोधः - ஸத்தாகவும் சித்தாகவும் இருப்பவன், इति - என்பது, ब्रह्मानुचिन्तनम् - ப்ரஹ்மஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்யும் முறை.

ஸகுணமான ஈசுவரனும் நிர்குணமான ப்ரஹ்மமும் நான்தான் என்று கூறுகிறார். எங்கும் இருந்து எல்லாம் அறிந்து, எல்லாச் சக்திகளுடன் எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவர் ஈசுவரன். மாயையுடன் சேர்ந்த நிலையில்தான் இவை ஏற்படும். இவர் ஸகுணமூர்த்தி. இவரும் என்னைத் தவிற வேறில்லை. மாயை விலகிவிட்டால் மிஞ்சுவது ஸச்சிதானந்த ப்ரஹ்மம். அதுவும் நான்தான். இவ்வாறு ப்ரஹ்மாநுசிந்தனம் செய்யவேண்டும். (25)

(அ) எது உண்மை, எது பொய் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார் :—

अयं प्रपञ्चो मिथ्यैव सत्यं ब्रह्माहमव्ययम् ।
अत्र प्रमाणं वेदान्ता गुरवोऽनुभवस्तथा ॥ २६ ॥

அயம் ப்ரபஞ்சோ மித்யைவ ஸத்யம் ப்ரஹ்மாஹமவ்யயம் ।
அத்ர ப்ரமாணம் வேதாந்தா குரவோநுபவஸ்ததா ॥

**अयं** - இந்த, **प्रपंचः** - பிரபஞ்சம், **मिथ्यैव** - பொய்யே, **अहं** - நான், **सत्यं** - உண்மையானதும், **अव्ययं** - அழிவற்றது மான, **ब्रह्म** - ப்ரஹ்மம். **अत्र** - இந்த விஷயத்தில், **वेदान्ताः** - உபநிஷத்துக்களும், **गुरवः** - ஆசார்யர்களும், **तथा** - அவ்வாறே, **अनुभवः** - அநுபவமும், **प्रमाणम्** - பிரமாணம்.

நாம் காணும் பிரபஞ்சம் முழுவதும் பொய். வாஸ்தவம் அல்ல. பொய் என்பதற்கு அடியோடு பிரபஞ்சம் இல்லை என்றோ, அதனால் ஒரு காரியமும் நடைபெறாது என்றோ பொருள் அல்ல. பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை நன்கு விசாரித்துப் பார்த்தோமானால், ஒருவிதத்திலும், அதாவது இருக்கிறது என்றோ, இல்லை என்றோ விளக்கிக் கூறமுடியாத நிலையில் இருப்பதால் உண்மையாக இல்லை, பொய் என்று தீர்மானிக்கிறோம். பிரபஞ்சம் பொய்யாக இருந்தாலும் அதனால் எல்லா வியவஹாரமும் நடைபெறலாம். உலக வியவஹாரம் நடைபெற பொருள் இருந்தால் போதும். அது உண்மையாக இருக்கவேண்டியதில்லை. கயிற்றில் தோன்றிய பொய்ப் பாம்பு பயத்தை உண்டுபண்ணுவதில்லையா. இது கயிறு என்று தெரிந்ததும் பாம்பு மறைந்து போவதுபோல் ப்ரஹ்மத்தை அறிந்ததும் பிரபஞ்சமும் மறைந்துபோய்விடும். அந்த ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள். அதுவே ஆத்மா.

இந்த விஷயத்தை '**नेह नानास्ति किंचन**' '**एकमेवाद्वितीयं**' '**तत्सत्यं**' (நேஹ நாநாஸ்தி கிஞ்சந, ஏகமேவாத்விதீயம், தத்ஸத்யம்) முதலான உபநிஷத்துக்கள் நமக்குக் காட்டுகின்றன. இவைகளே பிரமாணம். உபநிஷத்துக்களின் மூலம் ஆத்மானுபவம் பெற்ற ஆசார்யர்களும் பிரமாணம். கடைசியாக அந்த ஆசார்யரின் உபதேசத்தால் அவரவர்களுக்கு ஏற்படும் ஸ்வானுபவமும் இதில் பிரமாணமாகும். ஆசார்யரிடமிருந்து உபநிஷத் மஹாவாக்யார்த்த உபதேசம் பெற்றால்தான் ஸ்வானுபவம் ஏற்படும் என்பதை இங்கு காட்டுகிறார். (26)

(அ) ப்ரஹ்மவித்தான ப்ரமாசார்யாள் முன் சொல்லப் பட்ட பிரமாணங்களில் மூன்ருவதான ஸ்வாநுபவத்தை விவரித்துக் காட்டுகிருர் :—

**ब्रह्मैवाहं न संसारी न चाहं ब्रह्मणः पृथक् ।**
**नाहं देहो न मे देहः केवलोऽहं सनातनः ॥ २७ ॥**

ப்ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ ந சாஹம் ப்ரஹ்மண: ப்ருதக்।
நாஹம் தேஹோ ந மே தேஹ: கேவலோஹம் ஸநாதன: ॥

**अहं** - நான், **ब्रह्मैव** - ப்ரஹ்மமே, **न संसारी** - ஸம்ஸாரி அல்ல. **अहं** - நான், **ब्रह्मणः** - ப்ரஹ்மத்தைக் காட்டிலும், **न पृथक्** - வேறு அல்ல. **अहं** - நான், **न देहः** - சரீரம் அல்ல. **देहः** - சரீரம், **न मे** - என்னுடையது அல்ல. **अहं** - நான், **सनातनः** - எப்பொழுதும் இருப்பவன், **केवलः** - தனிப் பட்டவன்.

ஆத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் கொஞ்சமும் வேற்றுமை கிடையாது. ஆத்மாவே ப்ரஹ்மம். ப்ரஹ்மமே ஆத்மா. அக்ஞானத்தால் இரண்டாகத் தோன்றுகிறதே தவிற உண்மையில் தத்வம் ஒன்றுதான். உலக தர்மங்கள் ஒன்றும் ஆத்மாவுக்குக் கிடையாது. அக்ஞான நிலையில் பாமரன் தேஹமே நான் என்று நினைக்கிருன். கொஞ்சம் படித்து விவேகம் பெற்றவன் தேஹத்தைக் காட்டிலும் வேருகத் தன்னைத் தெரிந்துகொண்டாலும் இது என் தேஹம் என்று அபிமானம் கொள்கிருன். ஞானி தேஹத்தை நான் என்ருே, தன்னுடையது என்ருே எண்ணமாட்டான். எப்பொழுதும் மாறுபாடில்லாமல் ஒரேமாதிரியாக இருப்பதும் பிரபஞ்சத்துடன் ஒட்டாமல் தனித்து நிற்பதுமான ப்ரஹ்மத்தையே நான் என்று நினைப்பான். (27)

(அ) மூன்ருவது பிரமாணமான அநுபவத்தைக் கூறி விட்டு முதலாவதான வேதாந்த பிரமாணத்தைக் காட்டு கிருர் :—

**एकमेवाद्वितीयं वै ब्रह्मणो नेह किंचन ॥ २८ ॥**

ஏகமேவாத்விதீயம் வை ப்ரஹ்மணோ நேஹ கிஞ்சந ॥

(ப்ரஹ்மம்) **एकमेव** - ஒரே பொருள். **अद्वितीयम्** - இரண்டு அற்றது. **इह** - இங்கு. **ब्रह्मणः** - ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேருக **किंचन** - ஒன்றும் **न** - இல்லை.

**एकमेवाद्वितीयं, नेह नानास्ति किंचन** (ஏகமேவாத்விதீயம், நேஹ நாநாஸ்தி கிஞ்சன) என்பது உபநிஷத் வாக்யங்கள். தத்வம் ஒன்றுதான், இரண்டற்றது, ப்ரஹ்மத்தை காட்டிலும் வேருக ஒன்றும் இல்லை என்பது இதன் பொருள். உலகில் பொதுவாக ஒவ்வொரு பொருளிலும் மூன்றுவித வேற்றுமை களைக் காணலாம். மனிதனை எடுத்துக்கொள்வோம். ஒரு மனிதன் மற்றொரு மனிதனைக்காட்டிலும் வேருனவன். இது ஸஜாதீயபேதம். மனிதன் மரத்தைக்காட்டிலும் வேருன வன் என்பது விஜாதீயபேதம். மனிதன் ஒருவனுனாலும் அவனிடம் கை, கால் முதலான பல வேற்றுமைகள் காணப் படுகின்றன. இது ஸ்வகதபேதம். இம் மூன்று பேதங்களும் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றன. ப்ரஹ்மத்தில் இம் மூன்று பேதங்களும் இல்லை என்பதைக் காட்டவே **एकं** (ஏகம்), **एव** (ஏவ), **अद्वितीयम्** (அத்விதீயம்) என்று மூன்று பதங்கள் உபநிஷத்தில் காணப்படுகின்றன. ப்ரஹ்மம் ஒன்று என்பதால் அதுபோன்ற வேறு பொருள் இல்லை, அதாவது ஸஜாதீய பேதம் இல்லை என்று கிடைக்கிறது. ‘இரண்டற்றது’ என்பதால் விஜாதீய பேதம் இல்லை. என்று கிடைக்கிறது. ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேருன இரண்டாவது பொருளே கிடையாது. ‘ஒன்று**தான்**’ என்பதால் ஸ்வகதபேதம் இல்லை. அதாவது உடலில் பல வேற்றுமைகள் இருப்பதுபோல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் சிறிதும் வேற்றுமை இல்லை. அது அகண்டம் என்று கிடைக்கிறது. மூன்றுவித வேற்றுமைகளும் அற்ற ப்ரஹ்ம தத்வம் ஒன்றே உண்மைப்பொருள். அதுவே ஆத்மா என்பதுதான் உபநிஷத் ஸித்தாந்தம். (28)

(அ) கடைசியாக ஆத்மானுபவம் ஏற்பட உபதேசம் செய்த ஸத்குருவையும் அநுக்ரஹம் செய்த ஈசுவர ஸ்வரூபத்தையும் அநுஸந்தானம் செய்வதுடன் தியான மார்க்கத்தைக்காட்டி நூலை உபஸம்ஹாரம் செய்கிறார்:—

हृदयकमलमध्ये दीपवद्वेदसारं
प्रणवमयमतर्क्यं योगिभिर्ध्यानगम्यम् ।
हरिगुरुशिवयोगं सर्वभूतस्थमेकं
सकृदपि मनसा वै चिन्तयेद्यः स मुक्तः ॥ २९ ॥

ஹ்ருதயகமலமத்யே தீபவத் வேதஸாரம்
ப்ரணவமயமதர்க்யம் யோகிபிர் த்யாநகம்யம் |
ஹரிகுருஶிவயோகம் ஸர்வ பூதஸ்தமேகம்
ஸக்ருதபி மநஸா வை சிந்தயேத் ய: ஸ முக்த: ||

**यः** – எவன், **हृदयकमलमध्ये** – தாமரைபோன்ற ஹிருதயத்தில், **दीपवत्** – தீபம்போல் ஒளியுள்ளதும், **वेदसारं** – உபநிஷத்தின் ஸாரமானதும், **प्रणवमयं** – ஓங்கார ஸ்வரூபமானதும், **अतर्क्यं** – புத்தியால் ஊஹிக்கமுடியாததும், **योगिभिः** – மனத்தை அடக்கிய யோகிகளால், **ध्यानगम्यं** – தியானத்தால் அறியக்கூடியதும், **सर्वभूतस्थं** – எல்லாபிராணிகளிடமும் இருப்பதும், **एकं** – ஒன்றானதும், **हरिगुरुशिवयोगं** – விஷ்ணு, ஆசார்யன், சிவன் இம்மூன்றும் சேர்ந்ததுமான ப்ரஹ்மதத்வத்தை, **सकृदपि** – ஒரு தடவையாவது, **मनसा** – மனத்தால், **चिन्तयेत्** – தியானம் செய்கிறானோ, **सः** – அவன், **मुक्तः** – முக்தன்.

இந்நூலின் ஆரம்பத்தில் ‘ நானே பரப்ரஹ்மம் ’ என்ற உறுதியான ஞானம் பெற்றவன்தான் முக்தன் ’ என்று முக்தனுடைய லக்ஷணத்தைக் கூறி ஞானம் உறுதிப்பட ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்யவேண்டிய முறைகளையும் விரிவாகக்காட்டி முடிவில் ஞானத்திற்கு ஸாதனமாக தியான யோகத்தை உபதேசிக்கிறார். எல்லா பிராணி

களிடமும் ஒரே ப்ரஹ்மதத்வம் விளங்குகிறது. அதை நம் புத்தியால் ஊஹித்துத் தெரிந்துகொள்ள முடியாது. மனத்தை அடக்கி இடைவிடாது தியானம் செய்தால்தான் அதை அறிந்து கொள்ளலாம். உபநிஷத்தின் தாத்பர்யம் இதில்தான். இதை தாமரை உருக்கொண்ட தன் ஹிருதயத்தில் ஜ்யோதி ஸ்வரூபமாக மனதால் இடைவிடாது சிந்திக்க வேண்டும். தன் ஆத்ம ஸ்வரூபமாக தியானம் செய்ய வேண்டும். தியானம் செய்பவனுக்கு சிவன் வேறு, விஷ்ணு வேறு என்ற வேற்றுமையோ, குரு வேறு, ஈசுவரன் வேறு என்ற வேற்றுமையோ சிறிதும் தோன்றக்கூடாது. சிவனாகவும் விஷ்ணுவாகவும் தோன்றும் தத்வம் ஒன்றே. அதே தத்வம் தான் குருமூர்த்தியாகவும் விளங்குகிறது என்று தியானிக்கவேண்டும். இவ்வாறு சிவன், விஷ்ணு முதலான எல்லா தேவதாமூர்த்திகளும் ஆசார்ய மூர்த்தியும் ஒன்று சேர்ந்த ஸகுண ப்ரஹ்ம ஸ்வரூபத்தை இடைவிடாது தியானம் செய்து வந்தால் ஈசுவராநுக்ரஹத்தால் ஸுலபமாக ஞானம் பெற்று முக்தனாவான்.

இங்கு எல்லோருக்கும் உபயோகப்படும்படியான முக்யமான உபதேசத்தை ஆசார்யாள் காட்டியிருக்கிறார். சிவன், விஷ்ணு முதலியவை ஒரே பரப்ரஹ்மத்தின் லீலாமூர்த்திகள். அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வோ, வேற்றுமையோ சிறிதும் பாராட்டக்கூடாது. அத்துடன் ஈசுவரனைக் காட்டிக் கொடுத்த ஆசார்யரை ஸாமான்ய மனிதனாக எண்ணாமல் அவரையும் ஈசுவரனாகவே நினைக்கவேண்டும். இது முக்யமாக் கவனிக்கத் தகுந்தது. (29)

ப்ரஹ்மாநுசிந்தனம் முற்றிற்று.



॥ श्रीः ॥

# ॥ एकश्लोकप्रकरणम् ॥

## ஏகசுலோக பிரகரணம்.

[* ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் சிஷ்யர்களுடன் விஜய யாத்திரை செய்துவரும் சமயம், ஒரு கிராமத்தில் சாஸ்திரங் களைக் கற்றுணர்ந்து, ஸதாசார ஸம்பன்னராக இருக்கும் ஒருவருக்கு, பூர்வ ஜன்ம கர்மவசத்தால் திடீரென ஏற்பட்ட மஹாரோகத்தினுல் உடலெல்லாம் வெளுத்து, பார்வை மங்கி, லஜ்ஜையினுல் வெளியில் வந்து ஜனங்களுடன் பழக ஸங்கோசப்பட்டுக்கொண்டு, அவர் வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்தார். ஆனுலும், பூர்வஸுகிருதவசத்தாலும், வியாதி யாலும், சரீரத்திலும் மற்றும் எல்லா விஷயங்களிலும் பூர்ண மான வைராக்யம் ஏற்பட்டிருந்தது. ஆசார்யாள் அங்கு வந்திருப்பது தெரிந்து, அவருடைய மஹிமையைக் கேட்டு, அவருடைய கால்களில் விழுந்து, தன்னைக் காப்பாற்றும்படி வேண்டிக்கொண்டார். அதைக்கண்டு பரமகாருண்ரிகரான பகவத்பாதர், அவருடைய மனப்பரிபாகத்தை அறிந்து, எப்படியாவது ஸம்ஸார ஸங்கடத்திலிருந்து அவரைக் காப்பாற்றவேண்டுமென்று தீர்மானித்து, பிருஹதாரண்யக உபநிஷத்தில் நான்காவது அத்யாயத்தில் ஜனகயாக்ஞவல்க்ய ஸம்வாதரூபமாக அமைந்துள்ள ஜ்யோதிர் பிராஹ்மணத்தில் கூறப்பட்டபடி ஸ்வயம்ஜ்யோதிஸ்வரூபத்தை உபதேசித்து, 'அதுவேதான் நீ' என்ருர். அவர் உத்தமாதிகாரியாயிருந்த படியாலும், பரமாசார்யாள் உபதேசித்ததாலும், அடுத்த க்ஷணத்தில் அவருக்கு ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்டது. இதைக்கண்டு ஆசார்யாள், உலகில் யாவரும் இதனுல் பயன் பெறவேண்டும் என்ற கருணையால், அவருக்கு உபதேசித்த விஷயத்தை அடக்கி, கேள்வி பதில் உருவத்தில் பின் வரும் சுலோகத்தை அருளினர்கள். இது ஒரே சுலோகமாயிருந்தா லும் ஒரு பிரகரணமாகவே அமைந்துவிட்டது. இந்த சுலோகத்தின் முடிவில் சிஷ்யன் தன் அநுபவத்தை வெளி

*இவ்விஷயம் ஸ்வயம்ப்ரகாசயதிகள் செய்த வியாக்யானத் தில் காணப்படுகிறது.

யிட்டுவிட்டபடியால், அதன்பிறகு அவனுக்கு உபதேசிப்ப தற்கு அவசியம் இல்லை. ஒரு சுலோகத்திலேயே உபதேசம் முடிந்துவிட்டது. விரிவான கிரந்தங்களை பார்த்துத் தெரிந்து கொள்ளமுடியாத உத்தமாதிகாரிகள் இந்த ஒரு சுலோகத்தின் கருத்தை அநுஸந்தானம் செய்வதாலேயே ஆத்மஸாக்ஷாத்காரம் அடையலாம்.]

किं ज्योतिस्तव भानुमानहनि मे रात्रौ प्रदीपादिकं
स्यादेवं रविदीपदर्शनविधौ किं ज्योतिराख्याहि मे ।
चक्षुस्तस्य निमीलनादिसमये किं धीर्धियोदर्शने
किं तत्राहमतो भवान् परमकं ज्योतिस्तदस्मि प्रभो ॥

கிம் ஜ்யோதிஸ்தவ பாநுமான் அஹநி மே ராத்ரௌ ப்ரதீபாதிகம்
ஸ்யாதேவம் ரவிதீபதர்ஶநவிதௌ கிம் ஜ்யோதிராக்யாஹி மே ।
சக்ஷுஸ்தஸ்ய நிமீலநாதிஸமயே கிம் தீர் தியோதர்ஶநே
கிம் தத்ராஹமதோ பவான் பரமகம் ஜ்யோதிஸ்ததஸ்மி ப்ரபோ ॥

**ஆசார்யர் :— तव** - உனக்கு, **ज्योतिः** - பிரகாசம், **किम्** - எது? (எந்த பிரகாசத்தால் தெரிந்துகொள்கிறாய்?)

**சிஷ்யன் :— अहनि** - பகலில், **मे** - எனக்கு, **भानुमान्** - சூரியன். (கண்ணால் விஷயங்களைப்பார்க்க சூரியபிரகாசம் உதவி செய்கிறது.)

**ஆசா :— रात्रौ** - இரவில் (எது பிரகாசத்தைக் கொடுக்கிறது?)

**சிஷ்ய :— प्रदीपादिकम्** - விளக்கு முதலியவை.

ஆசா :—**एवं स्यात्** - இவ்விதம் இருக்கலாம். (ஆனால்) **रविदीपदर्शनविधौ** - சூரியனையும், தீபத்தையும் பார்க்கும் விஷயத்தில் **किं** - எது **ज्योतिः** - பிரகாசத்தைத்தருவது? **मे** - எனக்கு **आख्याहि** - சொல்.

**சிஷ்ய :— चक्षुः** - கண்.

**ஆசா :— तस्य** - அந்தக்கண்ணுக்கு, **निमीलनादिसमये** - மூடுதல், மறைவு முதலியவை ஏற்படும் சமயம் **किं** - எது ஜ்யோதி ?

**சிஷ்ய :— धीः** - புத்தி.

**ஆசா :— धियः** - புத்தியை, **दर्शने** - அறியும் விஷயத்தில் **किं** - எது ஜ்யோதி ?

**சிஷ்ய :— तत्र** - அதில் **अहं** - நான் (பிரகாசப்படுத்து கிறேன்)

**ஆசா :— अतः** - ஆகையால் **भवान्** - நீர் **परमकं** - மேலான (தானே பிரகாசிக்கும்) **ज्योतिः** - பிரகாசவஸ்து.

**சிஷ்ய :— प्रभो** - ப்ரபுவே! **तत्** - அந்த ஜ்யோதிஸ்வரூப மாக **अस्मि** - (நான்) இருக்கிறேன்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் நான்காவது அத்தியா யத்தில் மூன்ருவது பிராஹ்மணத்திற்கு ஜ்யோதிர் ப்ராஹ் மணம் என்று பெயர். அதில் பின்வரும் விஷயம் காணப் படுகிறது. யாக்ஞவல்க்யர் அடிக்கடி மஹாராஜா ஜனக ரிடம் செல்வதுண்டு. ஒவ்வொரு தடவையும் அவருக்குத் தேவையான பொருள்களைக் கொடுப்பதுடன், ஜனகர் அவரிடம் தன் ஸந்தேஹங்களைக் கேட்டுப் பல அபூர்வ விஷயங்களையும் தெரிந்துகொள்வது உண்டு.

ஒருஸமயம் யாக்ஞவல்க்யர் ‘இந்தத் தடவை ஜனகர் என்ன கேட்டாலும் ஒன்றும் சொல்வதில்லை’ என்ற தீவிர ஸங்கல்பத்துடன், யோகக்ஷேமத்திற்காக ஜனகரிடம் சென்ருர். வழக்கம்போல் ஜனகர் ப்ரச்னம்செய்தார். பதில் சொல்லவேண்டிய நிர்பந்தம் யாக்ஞவல்க்யருக்கு ஏற்பட்டு விட்டது. ஏனெனில், முன்ஒரு ஸமயம் ஜனகர் அக்னி ஹோத்ர ஸம்பந்தமான பல அபூர்வ விஷயங்களைத்

தெரிந்து சொன்னதைக்கண்டு, யாக்ஞவல்க்யர் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, வரம் கொடுத்தார். ஜனகர் காம ப்ரச்னத்தையே (தன் இஷ்டப்படி எதைக் கேட்டாலும் பதில் கூறவேண்டியதையே) வரமாகக் கேட்டு, அதை மற்றோர்ஸமயம் பெற்றுக்கொள்வதாகக் கூறிவிட்டார். அந்த வரத்தை ஞாபகப்படுத்தி ஜனகர் இப்பொழுது கேட்கவே, தன் ஸங்கல்பத்திற்கு விரோதமாகவே பதில் சொல்ல வேண்டிய அவசியம் யாக்ஞவல்க்யருக்கு ஏற்பட்டது. இவ்வாறு வரநிர்பந்தம்மூலம் இந்த வித்யையை ஜனகர் பெற்றதால், இதன் தனிச் சிறப்பு நன்கு தெரியவருகிறது. மிகச் சிறந்த விஷயங்களை ஸுலபமாக எல்லோருக்கும் ஆசார்யர்கள் உபதேசித்துவிட மாட்டார்கள். நசிகேதஸ் ஸும் வரம்மூலம்தான் தர்மராஜாவிடமிருந்து ஆத்மவித்யையைப் பெற்றான். தேவராஜாவோ 101 வருஷம் சுச்ரூஷை செய்து ப்ரஹ்மாவினிடம் ஆத்மவித்யையைப் பெற்றான். காமப்ரச்ன வரத்தைக்கொண்டு ஜனகர் கேட்கிறார் :—

**ஜனகர் :—** மனிதன் எந்த பிரகாசத்தால் விஷயங்களை தெரிந்து கொள்கிறான் ?

**யாக்ஞவல்க்யர் :—** சூரிய பிரகாசத்தால்.

**ஜன :—** சூரியன் அஸ்தமித்த பிறகு எது பிரகாசத்தைத் தருகிறது ?

**யாக்ஞ :—** சந்திரன்.

**ஜன :—** சந்திரனும் அஸ்தமித்த பொழுது, அதாவது நிலவு இல்லாத சமயம் எதனால் பிரகாசம் ஏற்படுகிறது ?

**யாக்ஞ :—** அக்னி (தீபம் முதலியவை).

**ஜன :—** தீபவெளிச்சமும் இல்லாத இடத்தில் எது ?

**யாக்ஞ :—** சப்தம், வாசனை முதலியவற்றால் மனிதர்கள் அறிந்து கொள்கிறோம்.

ஜன :— இந்திரியம், மனம் முதலியவைகளும் அடங்கியுள்ள ஸுஷுப்தியிலும், ஸ்வப்னத்திலும் பிரகாசிப்பது எது?

யாக்ஞ :— ஆத்ம ஜ்யோதிஸ்ஸுதான்.

சரீரம், இந்திரியம், புத்தி முதலிய எல்லாவற்றைக் காட்டிலும் வேறானது ஆத்மா. அது ஸ்வயம் பிரகாச (தானே பிரகாசிக்கும்) வஸ்து. மற்றென்றால் அது அறியப் படுவதில்லை. இதுதான் எல்லாவற்றையும் பிரகாசப்படுத்து கிறது. உலகில் அறிவு ஏற்பட உதவியாக இருக்கும் இந்திரியம், புத்தி முதலியவைகளையும், சூரியன், சந்திரன் முதலியவைகளையும் பிரகாச வஸ்துக்களாக நாம் அறியாமையால் எண்ணிக்கொண்டிருக்கிறோம். பார்க்கும் சக்தி கண்ணுக்கும், கேட்கும் சக்தி காதுக்கும், அறியும் சக்தி மனதுக்கும், இதுபோலவே மற்ற இந்திரியங்களுக்கும் அந்தந்த சக்தி இருப்பதாக எண்ணுகிறோம். இது தவறு, உண்மையில் ஆத்மா ஒன்றுதான் பிரகாச வஸ்து. ஆத்ம சக்தியால் தான் இவைகளும் பிரகாச வஸ்துக்களாகத் தோன்றுகின்றன. ஆத்ம சைதன்யத்தால் இவைகள் அறியப்படுகின்றன. அறியப்படுவதால் இவை ஜடம், இயற்கையில் இவைகளுக்கு பிரகாசம் கிடையாது. இவை ஆத்மா அல்ல, தேஹாதிவில்க்ஷணமான ஸ்வப்ரகாச வஸ்துதான் ஆத்மா, அதுவே நாம். இதுதான் இந்த உபநிஷத்தின் தாத்பர்யம். இந்த விஷயம் பல உபநிஷத்துக்களில் காட்டப்பட்டிருந்த போதிலும் இங்கு கேள்விபதில் ரூபமாக தெளிவாக விளக்கப் பட்டிருக்கிறது. எல்லா இடங்களிலும் ஆத்ம சைதன்யமே பிரகாசித்தபோதிலும், ஜாக்ரத் காலத்தில் இந்திரியம், மனம் இவைகளுடன் சேர்ந்திருப்பதால், அப்பொழுது ஏற்படும் ஞானம் ஆத்ம சைதன்யத்தால்தான் என்பதை தீர்மானிக்கமுடியாது. அதற்காகவே இவைகள் இல்லாத நிலையைக் காட்டி அங்கு ஏற்படும் ஞானம் ஆத்ம சைதன்யத்தால்தான் என்பதை விளக்கி, இதுபோலவே அவை இருக்கும் சமயத்திலும் ஆத்ம சைதன்யத்தால்தான் ஞானம் ஏற்படுகிறது என்பது தீர்மானிக்கப்படுகிறது.

இவ்வாறு உபநிஷத்தில் கூறப்பட்ட கருத்துக்கள் எல்லாவற்றையும் ஆசார்யாள் ஒரே சுலோகத்தில் காட்டி இருக்கிறார். கேள்வி பதில் உருவமாக அமைந்துள்ளது இந்த சுலோகம். இந்திரியம், மனம் முதலியவைகளாலேயே அறிவு ஏற்படுவதாக எண்ணிக்கொண்டிருக்கும்வரை ஸ்வப்ரகாசமான ஆத்ம வஸ்துவை அவன் அறிந்துகொள்ள முடியாது. அந்த எண்ணம் நீங்கவேண்டும். அதற்காக சிஷ்யனிடம் கேள்வி கேட்டு அவன் கூறும் பதிலைக் கொண்டே ஸ்வப்ரகாசமான ஆத்ம வஸ்துவை உபதேசிக்கிறார். உபநிஷத்திலும் கேள்வி பதில் ரூபமாகத்தான் விஷயம் விளக்கப்படுகிறது. ஆனால் அங்கு சிஷ்யனின் கேள்விக்கு குரு பதில் கூறுகிறார். இங்கு குருவே கேள்வி கேட்டு சிஷ்யனை பதில் சொல்லச்செய்து கடைசியில் உபதேசிக்கிறார். நிரூபணம் செய்யும் ரீதியிலும் சிறிது வித்யாஸம் காணப்படுகிறது. உபநிஷத்தில் இல்லாத வேறு சில யுக்திகளையும் இங்கு காட்டுகிறார்.

உலகில் நாம் செய்யும் எல்லாக் காரியங்களிலும், விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்கு, பிரகாசத்தின் உதவி தேவையாயிருக்கிறது. அது எது? எந்த பிரகாசத்தால் நமக்கு அறிவு ஏற்படுகிறது என்பது முதல் கேள்வி. இங்கு ஜ்யோதிஸ் என்பது அறிவைக் குறிக்கும். இந்த அபிப்பிராயத்தைப் புரிந்துகொள்ளாமல் வெளி இருளைப் போக்கும் வெளிச்சத்தைப்பற்றிக் கேட்பதாக எண்ணிக்கொண்டு 'சூரியன்' என்று சிஷ்யன் பதில் கூறுகிறான். கண் பார்வை இருந்தும் சூரிய வெளிச்சம் இல்லாவிட்டால் ஒன்றையும் அறிந்துகொள்ள முடியவில்லை. சூரிய வெளிச்சத்தால் எல்லாவற்றையும் அறிந்துகொள்கிறோம். ஆகையால் சூரியன்தான் ஜ்யோதி என்றான்.

இதைக்கேட்டு ஆசார்யர், அவன் அபிப்பிராயப்படியே அடுத்த கேள்வி கேட்கிறார். பகல் காலத்தில் சூரிய வெளிச்சத்தைக்கொண்டு தெரிந்துகொள்ளமுடியும். சூரியன்

அஸ்தமித்த பிறகு இரவில் எந்த பிரகாசத்தால் தெரிந்து கொள்கிறாய்? அப்பொழுது சூரியவெளிச்சம் இல்லையே! என்பது இரண்டாவது கேள்வி. தீபம் முதலியவற்றின் வெளிச்சத்தால் தெரிந்துகொள்கிறேன் என்பது பதில். தீபம் என்ற பதம் அக்னி தீபம், மின்சார தீபம் முதலான எல்லாவற்றையும் குறிக்கும். தீபம் இல்லாத இடத்தில் நிலவு வெளிச்சமும், நிலவு இல்லாத சமயம் நக்ஷத்திர வெளிச்சமும், சிலசமயம் மின்னல் வெளிச்சமும் பொருள்களைக் காட்டுகிறது என்று சிஷ்யன் பதில் கூறினான்.

மூன்றாவது கேள்வி—"எந்த பிரகாசத்தால் சூரியனை யும் தீபத்தையும் தெரிந்து கொள்கிறாய்" என்பது. சூரியன் சந்திரன், தீபம் முதலியவைகளின் பிரகாசத்தால் மற்றப் பொருள்களைத் தெரிந்து கொள்கிறோம் என்பது வாஸ்தவம். ஆனால் மற்றப்பொருள்களைக் காட்டுகின்ற சூரியன், தீபம் முதலியவைகளை எந்த ஜ்யோதிஸ்ஸால் தெரிந்துகொள் கிறாய்? இதன் பதில் கண்களால் சூரியன் முதலியவை களைப் பார்த்துத் தெரிந்துகொள்கிறோம் என்பது. சூரியனைப் போல் கண்ணுக்கு இருளைப்போக்கும் சக்தி இல்லை. ஆனாலும் கண்ணை ஜ்யோதிஸ்ஸாகக் கூறுகிறார். ஆகையால் இங்கு ஜ்யோதிஸ் என்பது ஞானத்தையே குறிக்கும்.

நான்காவது கேள்வி:—கண்களை மூடிக்கொண்டிருக் கும்போது நமக்கு எவ்வாறு அறிவு உண்டாகிறது? சில ஸமயம் நாம் கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்து ஆலோசனை செய்கிறோம். முன்பு நடந்த விஷயங்களை நினைத்துப் பார்க்கிறோம். நாம் நேரில் பார்த்த மனிதர்கள், இடம், ஸம்பவம் எல்லாம் ஞாபகத்திற்கு வருகிறது. கண்ணோ மூடியிருக்கிறது. அதனால் சூரியசந்திராதிகளும் ஒத்தாசைசெய்ய முடியாது. இப்பொழுது எந்த பிரகாசத் தால் நமக்கு அறிவு ஏற்படுகிறது என்பது கேள்வி. புத்தி யால் தெரிந்துகொள்கிறோம் என்பது பதில். உள் கருவி யான மனம்தான் அப்பொழுது எல்லாப் பொருள்களையும்

காட்டுகிறது. பார்த்தது, கேட்டது எல்லாம் மனதில் ஸூக்ஷ்மமாக ஸம்ஸ்காரரூபமாக அடங்கியிருக்கிறது. அவைகளை எல்லாம் இப்பொழுது மனத்தால் நினைத்துப் பார்க்கிறோம். ஆகையால் மனம்தான் ஜ்யோதி என்பது பதில்.

ஐந்தாவது கேள்வி—எந்த பிரகாசத்தால் புத்தியைத் தெரிந்துகொள்கிறாய் என்பது. புத்தியால் மற்றப் பொருள்களைத் தெரிந்துகொள்ளலாம். புத்தியை புத்தியைக் கொண்டே எப்படித் தெரிந்துகொள்ளமுடியும்? அதைத் தெரிந்துகொள்ள வேறொரு பிரகாசவஸ்து வேண்டாமா? அது எது? குடத்தைக்கண்ணால் பார்த்து 'இது குடம்' என்று முதலில் தெரிந்துகொள்கிறோம். இதுதான் குடஞானம் என்பது. இது மனோவிருத்தி. பிறகு 'குடம் எனக்குத்தெரியும்' என்று குடஞானத்தின் ஞானம் ஏற்படுகிறது. குடத்தை ஞானத்தால் (புத்தி விருத்தியால்) தெரிந்துகொண்டோம். அந்த குடஞானத்தை (புத்தி விருத்தியை) புத்தியால் தெரிந்துகொள்ள முடியாது. இதே மாதிரி நம் மனத்தில் காமம், ஸங்கல்பம், ஸந்தேஹம், தைர்யம், அதைர்யம், லஜ்ஜை, பயம் முதலானவை ஏற்படுகின்றன. இவைகளும் மனோவிருத்திகள்தான். நம் மனதில் காமம் முதலிய விருத்திகள் ஏற்பட்டிருப்பதை மனத்தால் அறிந்துகொள்ளமுடியாது. எந்த பிரகாசத்தால் இவைகளைத் தெரிந்துகொள்கிறோம்.

இங்கு **धियः दर्शने** (தியஃ தர்ஶநே) என்று பதம்பிரித்து இவ்வாறு பொருள் கூறப்பட்டது. **धियः अदर्शने** (தியஃ அதர்ஶநே) என்றும் பதம் பிரிக்கலாம். அப்பொழுது, புத்தியும் மறைந்துவிட்டால் எது பிரகாசிக்கிறது என்பது கேள்வியாகும். ஸுஷுப்தி அவஸ்தையில் மனமும் மறைந்து விடுகிறது. மனத்தின் கார்யம் ஒன்றும் அப்பொழுது இல்லை. இந்திரியம் முதலான மற்ற பிரகாச வஸ்துக்களும் அப்பொழுது இல்லை. ஆனாலும் ஸுஷுப்தியில் எல்லோருக்கும்

ஓர் அநுபவம் ஏற்படுகிறது. அது அப்பொழுது தெரியா விட்டாலும் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டபின் அதை நினைத்துக் கொள்கிறோம். सुखं अहं अस्वाप्सम् , न किंचिदवेदिषम् ' (ஸுகம் அஹம் அஸ்வாப்ஸம், ந கிஞ்சித் அவேதிஷம் - ஸுகமாகத் தூங்கினேன் ஒன்றும் தெரியாது) என்று காலையில் சொல்லுகிறோம். முன்னால் அனுபவமில்லா மல் பின்னால் நினைவு வராது. காலையில் நினைவு வருவ தால் ஸுஷுப்தியில் அநுபவம் இருக்கவேண்டும். அதற்குக் காரணம் என்ன என்பது கேள்வி.

மேலும் धियः अदर्शने (தியः அதர்ஶநே) என்பதால் ஸ்வப்நாவஸ்தையையும் வாங்கிக்கொள்ளலாம். ஸ்வப்னத் தில் மனம் இருந்தாலும் ஜாக்ரதவஸ்தையில்போல் அறிந்து கொள்ளும் நிலையில் இல்லை. ஏனெனில் ஸ்வப்னத்தில் நாம் பார்க்கும் விஷயங்கள் எல்லாம் உண்மையல்ல, மனோ மயம். மனமேதான் அந்தந்த விஷயங்களாகக் காணப் படுகிறது. அறியப்படும் விஷயங்களாக மனம் ஆகிவிட்ட படியால், அதை அறியும் வஸ்து மனதாக இருக்கமுடியாது. அதைக்காட்டிலும் வேறாகத்தான் இருக்கவேண்டும். அது எது என்பது கேள்வி. "நான்தான்" என்பது பதில். சூரியன், சந்திரன் முதலான வெளிப் பொருள்களும், இந்திரியம், மனம் முதலான உள் பொருள்களும் பிரகாசிக் காத நிலையில் ஆத்மா பிரகாசிக்கிறது என்று காட்டியதால், இவைகள் ஆத்மா அல்ல, சரீரம், இந்திரியம் முதலிய எல்லாவற்றைக்காட்டிலும் நான் வேறுபட்டவன். இவை களுடன் எனக்கு ஸம்பந்தம் கிடையாது என்பதை சிஷ்யன் தெரிந்துகொண்டான்.

இவ்வாறு 'த்வம்' பதார்த்தமான ஜீவஸ்வரூபத்தை சரீராதிகளினின்றும் பிரித்து சுத்தசைதன்ய பிரகாச ஸ்வரூப மாக சிஷ்யன் தெரிந்துகொண்டதும், உத்தமாதிகாரியான சிஷ்யனுக்கு 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தின் பொருளை உபதேசிக்கிறார் — अतो भवान् परमकं ज्योतिः (அதோ பவான்

பரமகம் ஜ்யோதி:— ஆதலால் நீ உயர்ந்த ஜ்யோதிஸ்) இங்கு ஜ்யோதிஸ் என்பது ஞானம். இருட்டைப் போக்கும் வெளிச்சம் அல்ல. ஆத்மா ஒன்றுதான் ஞானஸ்வரூப மானது, மற்றதால் பிரகாசிக்கப்படாதது, தானே பிரகாசிப்பது, நித்யமானது. இந்திரியம் மனம் முதலிய வைகள் எல்லாம் ஆத்ம ஜ்யோதிஸ்ஸால் அறியப்படும் பொருள்கள். ஆகையால் அவைகள் ஜடவஸ்துக்கள். ஆத்மசைதன்ய ஸம்பந்தத்தால்தான் அவைகளும் பிரகாச வஸ்துக்கள்போல் தோன்றுகின்றன. அந்த பிரகாசமும் எப்பொழுதும் இருப்பதில்லை. ஸ்வப்ன - ஸுஷுப்தி அவஸ்தைகளில் அவைகளுக்கு பிரகாசம் இல்லை.

உண்மையில் விசாரித்துப் பார்த்தோமானால், ஸ்வப்ன-ஸுஷுப்தி நிலைகளிலும் மனதை அறியும் விஷயத்திலும் ஆத்மா பிரகாசிப்பதுபோல மனதாலும், இந்திரியங்களாலும் அறியும் இடத்திலும் ஆத்மாதான் பிரகாசிக்கிறது. ஆத்ம சைதன்ய பிரகாசம்தான் மனோமூலமாகவும் இந்திரியங்கள் மூலமாகவும் வெளிப்படுகிறது.

**नानाछिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरम्**
**ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिः स्पन्दते ।**

நாநாச்சித்ர கடோதரஸ்தித மஹாதீபப்ரபா பாஸ்வரம்
ஞானம் யஸ்ய து சக்ஷுராதிகரணத்வாரா பஹி: ஸ்பந்ததே

என்று தக்ஷிணாமூர்த்தி அஷ்டகத்தில் ஆசார்யாள் சொல்லிய படி பல துவாரங்களுள்ள குடத்திற்குள் வைத்திருக்கும் தீபத்தின் ஒளி அந்த துவாரங்களின் வழியாக வெளியில் பிரகாசிப்பதுபோல, நம் சரீரத்தில் உள்ள ஆத்மசைதன்ய பிரகாசம் மனம் இந்திரியம் இவைகளின் வழியாக வெளிப் பட்டு, விஷயங்களை உணர்த்துகிறது. தீபத்தைக் கண்ணால் பார்க்காத சிறுவன் அந்த துவாரமே பிரகாசப்படுத்துகிறது என்று கூறுவதுபோல, ஆத்மாவை அறியாத நாம் இந்திரி யங்களும் மனமும் பிரகாசப்படுத்துவதாகத் தவறாக எண்ணு

கிருேம். எப்பொழுதுமே ஆத்மா பிரகாசித்தபோதிலும் இந்திரியங்களுடனும் மனமுடனும் கூடியிருக்கும் ஸமயம் ஏற்படும் ஞானம் ஆத்மசைதன்யத்தால்தான் என்பதை தீர்மானிக்க முடியாதாகையால்தான், இவைகள் எல்லாம் பிரகாசப்படுத்த முடியாத ஒரு நிலையைக் காட்டி, ஆத்மா ஸ்வயம்பிரகாச வஸ்து என்பதை தீர்மானிக்கிருர். உபநிஷத்துக்களில் ப்ரஹ்மம் ஞானஸ்வரூபமாக கூறப்பட்டிருக்கிறது. ஆத்மாவும் ஞானஸ்வரூபி என்று யுக்திகளால் சிஷ்யன் தெரிந்துகொண்டான். ஆகவே நீயேதான் அந்த ப்ரஹ்ம ஸ்வரூபம் என்று **तत्त्वमसि** (தத்த்வமஸி) மஹாவாக்யார்த்தத்தை ஆசார்யார் உபதேசித்தார்.

இந்த உபதேசத்தைக் கேட்டமாத்திரத்தில் நல்ல மனப்பரிபாகம் உள்ள அந்த சிஷ்யனுக்கு ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்டது. தன் அநுபவத்தை சிஷ்யன் எடுத்துக் கூறுகிருன் :—**तदस्मि प्रभो** (ததஸ்மி ப்ரபோ) ஹே குரோ! நான் அந்த பரம் ஜ்யோதிஸ்வரூபமாக இருக்கிறேன். இது '**अहं ब्रह्मास्मि**' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்ற மஹாவாக்யார்த்தத்தைக் காட்டுகிறது. இவ்வாறு ஆசார்யாள் இந்த ஒரு சுலோகத்திலேயே ஸ்வானுபவம் ஏற்படும்படி ஆத்மா தேஹாதிவிலக்ஷணம், ஸ்வயம் ஜ்யோதிஸ்வரூபம் அதுவே பரமாத்மா என்பதைத் தகுந்த பல யுக்திகளால் விளக்கிக் காட்டுகிருர்.

ஏகசுலோக பிரகரணம் முற்றிற்று.



॥ श्रीः ॥

# ॥ अद्वैतपञ्चरत्नम् ॥

## அத்வைத பஞ்சரத்னம்

---

[ஐந்து சுலோகங்கள் கொண்ட இப்பிரகரணத்தில், ஆத்மாவுக்கு ஜீவபாவம் ஏற்பட்ட விதத்தையும், அது நீங்கும் உபாயத்தையும் கூறி, தேஹாதிகளிலிருந்து ஆத்மாவைப் பிரித்துக்காட்டுகிறார். பிரபஞ்சம் பொய் என்பதையும் நிரூபணம் செய்கிறார். ஆத்மாவே பிரஹ்மம், பிரபஞ்சம் பொய் என்பதை விளக்கி அத்வைதமான தத்வத்தை ஸ்தாபிப்பதால் இதற்கு 'அத்வைத பஞ்சரத்னம்' என்ற பெயர் ஏற்பட்டு இருப்பதாகத் தெரிகிறது.]

(அ) முதலில் ஆத்ம வஸ்துவை தேஹாதிகளினின்றும் பிரித்துக்காட்டுகிறார் :—

**नाहं देहो नेन्द्रियाण्यन्तरङ्गो**
**नाहंकारः प्राणवर्गो न बुद्धिः ।**
**दारापत्यक्षेत्रवित्तादिदूरः**
**साक्षी नित्यः प्रत्यगात्मा शिवोऽहम् ॥ १ ॥**

நாஹம் தேஹோ நேந்த்ரியாண்யந்தரங்கோ
நாஹங்கார: ப்ராண வர்கோ ந புத்தி: ।
தாராபத்ய க்ஷேத்ர வித்தாதி தூர:
ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகாத்மா ஶிவோऽஹம் ॥

**अहं** – நான், **न देहः** – தேஹம் அல்ல. **न इन्द्रियाणि** – இந்திரியங்கள் அல்ல. (**न**) **अन्तरङ्गः** – மனம் அல்ல. **न अहंकारः** – அஹங்காரம் அல்ல. (**न**) **प्राणवर्गः** பிராணக் கூட்டம் அல்ல. **न बुद्धिः** – புத்தி அல்ல. **दारापत्यक्षेत्रवित्तादिदूरः** – மனைவி, பிள்ளை, இடம், பணம் முதலியவை களிலிருந்து வெகுதூரத்தில் இருப்பவன், (இவைகளுடன்

எனக்கு கொஞ்சமும் ஸம்பந்தம் கிடையாது) **अहं** - நான், **साक्षी**-நேரில் அறிபவன், **नित्यः**-அழிவு அற்றவன், **प्रत्यगात्मा**-உள்ளே விளங்கும் ஆத்மவஸ்து. **शिवः**-சிவமான ப்ரஹ்மம்.

சரீரம் முதலியவைகளையே ஆத்மா என்று எண்ணிக் கொண்டு, எல்லோரும் அவைகளையே 'நான்' என்று வியவஹாரம் செய்கிறோம். இது விபரீத ஞானம். இது நீங்கி ஆத்ம வஸ்துவை சுத்தமாகத் தெரிந்துகொண்டால்தான், அத்வைத ப்ரஹ்மானுபவம் ஏற்படும். அதற்காக, இந்த முதல் சுலோகத்தில் தேஹாதிகளினின்றும் பிரித்து சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டுகிறார். தேஹம், இந்திரியம், பிராணன், அந்தக்கரணம், இவை ஆத்மா அல்ல. அஹங்காரமும், புத்தியும் அந்தக்கரணத்தைச் சேர்ந்தவைதான். மனைவி, பிள்ளை, பணம் முதலியவைகளும் ஆத்மா அல்ல. தேஹத்தைப்போல மனைவி முதலியவற்றை ஒருவரும் நான் என்று எண்ணவிட்டாலும், சிலர் அவற்றில் மிகுந்த அபிமானம் கொள்கின்றனர். அவை இருந்தால் தாம் இருப்பதுபோலவும், அவை போய்விட்டால் தாம் போய்விட்டதுபோலவும் எண்ணுகின்றனர். மிகுந்த பிரியமுள்ள வஸ்து ஆத்மா என்று ஆத்மலக்ஷணம் கூறப்பட்டு இருக்கிறது. தன்னிடமுள்ளது போன்ற பிரியத்தை அவற்றிலும் காட்டுகின்றனர். இந்த அபிமானம் நீங்குவதற்காகத் தான் ஆத்மாவுக்கும் அவைகளுக்கும் வெகுதூரம், கொஞ்சமும் ஸம்பந்தம் கிடையாது என்று கூறுகிறார். தேஹாதிகள் ஆத்மா அல்ல என்பதன் காரணங்களை விவேகசூடாமணி முதலான பிரகரணங்களில் விரிவாகக் காட்டியிருக்கிறார். இங்கு சுருக்கமாக மூன்று காரணங்களைக் கூறுகிறார். **साक्षी** (ஸாக்ஷி) ஆத்மா ஸாக்ஷியாக இருப்பவன்; அதாவது எல்லாவற்றையும் அறிபவன். தேஹாதிகள் அறியப்படுபவை. இரண்டும் ஒன்றாக இருக்கமுடியாது. ஆகையால் ஆத்மா தேஹாதிகளைக்காட்டிலும் வேறுபட்டவன். மேலும் தனக்கு ஸம்பந்தம் இல்லாமல் பார்ப்பவனைத்தான் ஸாக்ஷி என்ற

பந்தம் குறிக்கும். ஆத்மாவை ஸாக்ஷி என்று கூறியதால், தேஹாதிகளுடனே, அவை செய்யும் காரியங்களுடனே ஆத்மாவுக்கு ஒருவித ஸம்பந்தமும் கிடையாது என்று தெரிகிறது. **नित्यः** (நித்ய:) ஆத்மாவுக்கு பிறப்பு, இறப்பு ஒன்றும் கிடையாது. தேஹாதிகளோ உண்டாகி அழிந்து போகக்கூடியவை. அதனுலும் தேஹாதிகள் ஆத்மா அல்ல. **प्रत्यगात्मा** (ப்ரத்யகாத்மா). ஆத்மா எல்லாவற்றிற்கும் உள்ளே விளங்கிவருகிறது. தேஹாதிகள் வெளிப்பொருள்கள். இக்காரணங்களால் தேஹாதிகளினின்றும் பிரித்து ஆத்ம வஸ்துவைத் தெரிந்துகொண்டவனுக்கு, அது ப்ரஹ்மஸ்வரூபமாகவே விளங்கும் என்பதைக் காட்டுகிருர் — **शिवोऽहम्** (சிவோஹம்) நான் அத்வைத ப்ரஹ்மஸ்வரூபமாக இருக்கிறேன். இது ஞானிகளின் அநுபவம். (1)

(அ) ஜீவத்தன்மை ஏற்பட்டவிதத்தையும், அது நீங்குவதற்கு உபாயத்தையும் காட்டுகிருர் :—

**रज्ज्वज्ञानाद्भाति रज्जौ यथाहिः**
**स्वात्माज्ञानादात्मनो जीवभावः ।**
**आप्तोक्त्याऽहिभ्रान्तिनाशे स रज्जु-**
**र्जीवो नाहं देशिकोक्त्या शिवोऽहम् ॥ २ ॥**

ரஜ்ஜ்வக்ஞானத் பாதி ரஜ்ஜௌ யதாऽஹி:
ஸ்வாத்மாஞானதாத்மனே ஜீவபாவ: ।
ஆப்தோக்த்யாऽஹிப்ராந்தி நாஶே ஸ ரஜ்ஜு:
ஜீவோ நாஹம் தேஶிகோக்த்யா ஶிவோஹம் ॥

**रज्ज्वज्ञानात्** - இது கயிறு என்று தெரிந்துகொள்ளாததால் **यथा** - எவ்வாறு **रज्जौ** - கயிற்றில் **अहिः** - பாம்பு **भाति** - தோன்றுகிறதோ (அதுபோலவே) **स्वात्माज्ञानात्** - தன் ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாததால், **आत्मनः** - ஆத்மாவுக்கு, **जीवभावः** - ஜீவத்தன்மை (ஏற்பட்டிருக்கிறது.) **आप्तोक्त्या** - நண்பனின் வார்த்தையால், **अहिभ्रान्तिनाशे** -

பாம்பு என்ற ப்ரமம் நீங்கியதும், **सः** - அது, **रज्जुः** - கயிருகத் தோன்றுகிறது. (அது போல்) **देशिकोक्त्या** - குருவின் உபதேசத்தால், **अहं** - நான் **न जीवः** - ஜீவன் அல்ல. **अहं** - நான், **शिवः** - அத்வைதமான சிவம். (என்று தெரிந்து கொண்டேன்)

சாயங்கால வேளையில் இலேசான இருளில் காற்றினுல் அசையும் கயிற்றைப்பார்த்து பாம்பு என எண்ணி பயந்து நடுங்குகிருன். தன் கண்ணுல் நேரில் கண்டதாகப் பிறரிடம் கூறுகிருன். உண்மையில் அங்கு பாம்பு இல்லாவிட்டாலும் அவன் கண்களுக்குப் பாம்பு தோன்றியதற்குக் காரணம் அக்ஞானம்தான். அதாவது இது கயிறு என்று தெரிந்து கொள்ளாததுதான். வேறு ஒன்றையும் இதற்குக்காரண மாகக் கூறமுடியாது. இந்தப் பாம்பு நீங்கவேண்டுமானுல், அவனுடைய ஆப்த நண்பன் அங்கு வந்து நேரில்பார்த்து 'இது பாம்பு அல்ல, கயிறுதான்' என்று எடுத்துக்கூற வேண்டும். நண்பன் வார்த்தையை நம்பி, இவனும் நன்கு கவனித்துப்பார்த்து, இது கயிறுதான் என்று தெரிந்து கொண்டுவிட்டால் அக்ஞானம் விலகிவிடும். அதனுல் தோன்றிய பாம்பும் நாசமடையும். அப்பொழுது கயிறுதான் தெரியும். பாம்பு தோன்ருது. இதைத்தவிற வேறு உபாயம் கிடையாது. இதுபோலவே ஆத்மாஞானத்தால், ஆத்ம ஸ்வருபத்தை நன்கு தெரிந்துகொள்ளாததால் நமக்கு ஜீவ பாவம் ஏற்பட்டிருக்கிறது. பிராணனை தரிப்பதால் ஆத்மா வுக்கு ஜீவன் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. பிரிக்க முடியாமல் அக்ஞானத்தால் தேஹாதிகளுடன் சேர்ந் திருக்கும் நிலைமைதான் ஜீவபாவம் என்பது. இதனுல் தேஹாதிகளையே ஆத்மாவாக எண்ணி எல்லாக் காரியங் களையும் நடத்தி வருகிரோம். பலவித துன்பங்களையும் அநுபவிக்கிரோம். ஆத்மாஞானத்தால் ஜீவபாவம் ஏற்பட்டிருப்பதால் அக்ஞானம் நீங்கினுல்தான் ஜீவபாவம் விலகும். அக்ஞானம் விலக ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்மஞானம் பெறவேண்டும். ஆத்மஞானம் பெற்றவன்

சரீராதிகளை நான் என்று எண்ணமாட்டான். தன்னை ஜீவனாக நினைக்கமாட்டான். அத்வைத ப்ரஹ்மஸ்வரூபமாக நினைப்பான். (2)

(அ) பிரபஞ்சம் பொய் என்பதைக்காட்டுகிறார்:—

आभातीदं विश्वमात्मन्यसत्यं
सत्यज्ञानानन्दरूपे विमोहात् ।
निद्रामोहात्स्वप्नवत्तन्न सत्यं
शुद्धः पूर्णो नित्य एकः शिवोऽहम् ॥ ३ ॥

ஆபாதீதம் விச்வமாத்மந்யஸத்யம்
ஸத்யஞானானந்தரூபே விமோஹாத் ।
நித்ராமோஹாத் ஸ்வப்னவத் தந்ந ஸத்யம்
ஶுத்த: பூர்ணோ நித்ய ஏக: ஶிவோஹம் ॥

**निद्रामोहात्**-தூக்கம் என்ற மயக்கத்தால், **स्वप्नवत्**-ஸ்வப்னத்தில் பொருள்கள் தோன்றுவதுபோல, **सत्यज्ञानानन्दरूपे**-ஸச்சிதானந்தஸ்வரூபமான, **आत्मनि**-ஆத்மாவில், **विमोहात्**-அக்ஞானத்தால், **असत्यं**-பொய்யான, **इदं विश्वं**-இந்த பிரபஞ்சம், **आभाति**-தோன்றுகிறது. **तत्**-அந்த பிரபஞ்சம், **न सत्यं**-உண்மையல்ல. **अहं**-நான், **शुद्धः**-பரிசுத்தமானதும், **पूर्णः**-எங்கும் நிறைந்ததும், **नित्यः**-அழிவற்றதும், **एकः**-ஒன்றானதுமான, **शिवः**-ப்ரஹ்மம்.

நாம் இரவில் படுத்துத் தூங்கும்பொழுது ஸ்வப்னத்தில் பல பொருள்களைக் காண்கிறோம். ஸ்வப்னத்திற்குக் காரணம் தூக்கம். தூங்காமல் விழித்துக்கொண்டிருப்பவன் ஸ்வப்னம் காண்பதில்லை. தூக்கம் என்பது மயக்கம். அதனால் நம்மை மறந்து விடுகிறோம். பல விஷயங்களைப் பார்க்கிறோம். பார்க்கும்பொழுது உண்மைபோலத்தான் தெரிகிறது. அவைகளால் ஸுகமும் துக்கமும் ஏற்படுகிறது. ஆனாலும், அவைகள் எல்லாம் விழித்துக்கொண்டபின்

காண்பதில்லே. ஆதலால் அவைகள் பொய் என்பது தீர் மானமாகத் தெரிகிறது. அதுபோலத்தான் இந்த பிரபஞ்ச மும் ஆத்மாவில் தோன்றுகிறது. ஆத்மா ஸச்சிதானந்த ஸ்வரூபம். இதைத் தெரிந்து கொள்ளாததால் விபரீதமான பிரபஞ்சம் தோன்றுகிறது. பிரபஞ்சம் நமக்கு உண்மை போலத் தோன்றினலும், அக்ஞானத்தால் தோன்றுவதால் ஸ்வப்னம்போல இதுவும் பொய்தான். ஆத்மா ஒன்றுதான் ஸத்யம். அதற்கு ஒரு ஸம்பந்தமும் கிடையாது. இதுவே ப்ரஹ்மம். அத்வைத வஸ்து. இதைத் தவிற இரண்டாவது பொருள் உண்மையாக இல்லே. (3)

(அ) பிறப்பு முதலான விகாரங்கள் ஆத்மாவுக்குக் கிடையாது என்று கூறுகிருர் :—

**नाहं जातो न प्रवृद्धो न नष्टो**
**देहस्योक्ताः प्राकृताः सर्वधर्माः ।**
**कर्तृत्वादिश्चिन्मयस्यास्ति नाहं-**
**कारस्यैव ह्यात्मनो मे शिवोऽहम् ॥ ४ ॥**

நாஹம் ஜாதோ ந ப்ரவ்ருத்தோ ந நஷ்டோ
தேஹஸ்யோக்தா: ப்ராக்ருதா: ஸர்வதர்மா: ।
கர்த்ருத்வாதிச்சிந்மயஸ்யாஸ்தி நாஹங்-
காரஸ்யைவ ஹ்யாத்மநோ மே ஶிவோஹம் ॥

**अहं** - நான் **न जातः** - பிறந்தவன் அல்ல, **न प्रवृद्धः** - வளர்ந்தவன் அல்ல. **न नष्टः** - அழிந்தவன் அல்ல. **प्राकृताः** - மாயையால் ஏற்பட்ட **सर्वधर्माः** - எல்லா தர்மங்களும் **देहस्य** - தேஹத்தினுடையவை (என்று) **उक्ताः** - சொல்லப்பட்டிருக் கின்றன. **कर्तृत्वादिः** - கர்த்ருத்வம் முதலியது, **अहंकारस्यैव** - அந்தக்கரணத்தினுடையதுதான், **चिन्मयस्य** - ஞானஸ்வரூப மான, **आत्मनः** - ஆத்மாவாக இருக்கும், **मे** - எனக்கு **नास्ति** - இல்லே. **अहं** - நான் **शिवः** - ப்ரஹ்மம்.

தேஹம், மனம் முதலியவை ஆத்மா அல்ல என்பதை முதல் சுலோகத்தில் காட்டினர். தேஹ தர்மங்களும் மனோ தர்மங்களும் ஆத்மாவுக்குக் கிடையாது என்பதை இங்கு கூறுகிறர். பிறப்பு, வளர்ச்சி, விநாசம் முதலிய தர்மங்கள் தேஹத்தைச் சேர்ந்தவை. தேஹம்தான் பிறக்கிறது, வளர்கிறது, கடைசியில் அழிந்துபோகிறது. ஆத்மா பிறப்பதும் இல்லை, வளர்வதும் இல்லை, அழிவதும் இல்லை. அது போல் கர்த்ருத்வம் (காரியங்களைச்செய்வது), போக்த்ருத்வம் (அநுபவிப்பது) முதலியவை மனத்தைச் சேர்ந்தவை. ஆத்மா கர்த்தாவும் அல்ல, போக்தாவும் அல்ல. அது சுத்த ஞானஸ்வரூபம். இந்த தர்மங்கள் ஆத்மாவில் இல்லாததால் ஆத்மா தேஹாதிகள் அல்ல. தேஹம், மனம் முதலியவை களிலிருந்து ஆத்மஸ்வரூபத்தைப் பிரித்துத் தெரிந்து கொள்ளாமல் ஒன்ருகவே கலந்து காண்பதால், தேஹ தர்மங்களையும் மனோ தர்மங்களையும் ஆத்மாவில் இருப்பதாக எண்ணி நான் பிறந்தேன், வளர்ந்தேன், நான் செய்கிறேன், அநுபவிக்கிறேன் என்று எல்லாம் அக்ஞானத்தால் கூறுகிருேம். உண்மையில் ஆத்மா தேஹாதிவிலக்ஷணமான சுத்த சைதன்ய ஸ்வரூபமான பரப்ரஹ்மம். (4)

(அ) கடைசியில் ஆத்மா அத்வைதம் என்பதை நிரூபணம் செய்து உபஸம்ஹாரம் செய்கிருர்:—

मत्तो नान्यत्किंचिदत्रास्ति विश्वं
सत्यं बाह्यं वस्तु मायोपक्लृप्तम् ।
आदर्शान्तर्भासमानस्य तुल्यं
मय्यद्वैते भाति तस्माच्छिवोऽहम् ॥ ५ ॥

மத்தோ நாந்யத் கிஞ்சிதத்ராஸ்தி விச்வம்
ஸத்யம் பாஹ்யம் வஸ்து மாயோபக்லுப்தம் ।
ஆதர்சாந்தர் பாஸமாநஸ்ய துல்யம்
மய்யத்வைதே பாதி தஸ்மாத் சிவோஹம் ॥

**अत्र**-இங்கு, **मत्तः**-என்னைக்காட்டிலும், **अन्यत्**-வேறாக, **सत्यं**-உண்மையாக, **विश्वं**-பிரபஞ்சம், **किंचित्**-ஒன்றும், **नास्ति**-இல்லை. **मायोपक्लृप्तं**-மாயையால் ஏற்பட்டுள்ள, **बाह्यं वस्तु**-வெளிப்பொருள், **अद्वैते**-அத்வைதமான, **मयि**-என்னிடம், **आदर्शान्तर्भासमानस्य**-கண்ணாடிக்குள் தோன்றும் பொருளுக்கு, **तुल्यं**-ஸமமாக, **भाति**-விளங்குகிறது. **तस्मात्**-ஆகையால், **अहं**-நான், **शिवः**-ப்ரஹ்மம்.

ஆத்மவஸ்து ஒன்றுதான் உண்மைப்பொருள். இதைக் காட்டிலும் வேறான பொருள் ஒன்றும் உண்மையில் கிடையாது. பலவித வேற்றுமைகள் உள்ள இப்பிரபஞ்சம் அத்வைதமான ஆத்மாவில் மாயையால் தோன்றுகிறது. தோன்றுவதைக்கொண்டு மட்டும் பிரபஞ்சத்தை உண்மை என்று தீர்மானிக்கமுடியாது. கண்ணாடிக்குள் தோன்றும் பொருள் பொய்யாக இருப்பதில்லையா? அது போல பிரபஞ்சமும் மாயையால் தோன்றுவதால் பொய் தான். இவ்வாறு பிரபஞ்சம் பொய் என்றும் தேஹாதி விலக்ஷணமான ஆத்மாவே ப்ரஹ்மம் என்றும் நிரூபணம் செய்தபடியாலும், ஆத்மாவைத்தவிற வேறாக இரண்டாவது பொருள் உண்மையாக இல்லாதபடியாலும் அத்வைதமான ப்ரஹ்மமே நான் என்று ஞானிக்கு அநுபவம் ஏற்படுகிறது.

அத்வைத பஞ்சரத்னம் முற்றிற்று.



|| श्रीः ||

# || यतिपञ्चकम् ||

## யதிபஞ்சகம்.

---

[ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த ஞானிகளான யதிகளின் மஹாபாக்யத்தைப்பற்றி வியந்து, அவர்கள் ஜீவன்முக்த நிலையில் உலகில் இருக்கும் விதத்தை ஐந்து சுலோகங்களால் விளக்குகிறது யதிபஞ்சகம் என்னும் இந்த பிரகரணம்]

**वेदान्तवाक्येषु सदा रमन्तो भिक्षान्नमात्रेण च तुष्टिमन्तः ।**
**विशोकमन्तःकरणे स्मरन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥ १ ॥**

வேதாந்தவாக்யேஷு ஸதா ரமந்தோ
பிக்ஷாந்நமாத்ரேண ச துஷ்டிமந்தः ।
விஶோகமந்தःகரணே ஸ்மரந்தः
கௌபீநவந்தः கலு பாக்யவந்தः ॥

**वेदान्तवाक्येषु**-உபநிஷத்துக்களிலுள்ள வாக்யங்களில், **सदा**-எப்பொழுதும், **रमन्तः**-ஆனந்தம் அடைபவர்களும், **भिक्षान्नमात्रेण**-பிக்ஷையில் கிடைக்கும் ஆஹாரத்தினாலேயே, **तुष्टिमन्तः** - ஸந்தோஷப் படுபவர்களும், **अन्तःकरणे** – மனதில் **विशोकं**-சோகமற்றதாக உபநிஷத்தில் கூறப்பட்ட ஆத்ம வஸ்துவை, **स्मरन्तः**-நினைப்பவர்களுமான, **कौपीनवन्तः** - கௌபீனவான்களான யதிகள், **भाग्यवन्तः**-மிகுந்த பாக்ய சாலிகள்.

ஸர்வஸங்கபரித்யாகம் செய்து ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டு ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்று, அந்த அநுபவத்துடன் ஸஞ்சரிக்கும் ஜீவன்முக்தர்கள்தான் உலகில் பாக்யம் பெற்றவர்கள். அவர்களிடம் கௌபீனம் என்னும்

கந்தையைத் தவிற வேறு ஒரு பொருளும் இருக்காது. ஒன்றையும் தன்னுடையதாக எண்ணமாட்டார்கள். ஒரு பொருளிலும் அபிமானம் இல்லாததாலும், கௌபீனத்தைத் தவிற வேறு ஒன்றையும் வைத்துக்கொள்ளாததாலும் பரமஹம்ஸர்களான யதிகளைத்தான் 'கௌபீநவந்தஃ' என்ற பதம் குறிப்பிடுகிறது. அதனால்தான் 'யதிபஞ்சகம்' என்று இதற்குப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. உபநிஷத் வாக்யங்களைத் தவிற வேறு ஒன்றும் பேசமாட்டார்கள். சோகம் அற்றதான ஆனந்தரூபமான ப்ரஹ்மஸ்வரூபத்தையே எப்பொழுதும் தியர்னம் செய்துகொண்டிருப்பார்கள். ஆனாலும் பிராரப்த கர்மாதீனமாக சரீரம் இருப்பதால் அதன் ஸ்வபாவத்தை ஒட்டி மற்றவர்களுக்குப்போல் அவர்களுக்கும் பசி ஏற்படலாம். அச்சமயம் பிக்ஷை எடுத்து அதில் கிடைத்த அன்னத்தாலேயே ஸந்தோஷம் அடைவார்கள். இவர்களே மிகுந்த பாக்யமுள்ளவர்கள். (1)

**मूलं तरोः केवलमाश्रयन्तः पाणिद्वयं भोक्तुममत्रयन्तः ।**
**कन्थामिव श्रीमपि कुत्सयन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥**

மூலம் தரோ: கேவலமாச்ரயந்தஃ
பாணித்வயம் போக்துமமத்ரயந்தஃ ।
கந்தாமிவ ஸ்ரீமபி குத்ஸயந்தஃ
கௌபீநவந்தஃ கலு பாக்யவந்தஃ ॥

**तरोः**-மரத்தின், **मूलं केवलं**-அடியை மட்டும், **आश्रयन्तः**-இருப்பிடமாகக் கொண்டவர்களும், **पाणिद्वयं**-இரு கைகளையும், **भोक्तुं**-சாப்பிடுவதற்கு, **अमत्रयन्तः**-பாத்திரமாகக் கொண்டவர்களும், **कन्थामिव**-கந்தையைப் போல, **श्रीमपि**-செல்வத்தையும், **कुत्सयन्तः**-வெறுக்கிறவர்களுமான, **कौपीनवन्तः**-கௌபீனம் மட்டும் தரித்த யதிகள், **भाग्यवन्तः**-பாக்யசாலிகள்.

ஞானிகளுக்கு சரீராபிமானம் இல்லாததால் மரத்தின் அடியிலேயே படுத்துத் தூங்குவார்கள். சரீர ஸௌக்யத்திற்

காக பிற இடம் தேடிச்செல்லமாட்டார்கள். கையிலேயே பிக்ஷான்னத்தை வாங்கி உட்கொள்வார்கள், அதற்காக இலையையோ, வேறு பாத்திரத்தையோ வேண்டமாட்டார்கள். தெருவில் கிடக்கும் கிழிந்த கந்தல் துணியைக் கண்டு எல்லோரும் அதை வேண்டாமல் வெறுக்கின்றனர். அந்த கந்தையைப்போலவே உலகில் உள்ள எல்லா ஐசுவர்யங்களையும் வெறுப்பவர்கள் யதிகள். அவர்களுக்கு ஒன்றிலும் அபிமானம் இருக்காது. (2)

**देहादिभावं परिमार्जयन्त आत्मानमात्मन्यवलोकयन्तः ।**
**नान्तर्न मध्यं न बहिः स्मरन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥**

தேஹாதிபாவம் பரிமார்ஜயந்த:
ஆத்மாநமாத்மந்யவலோகயந்த: ।
நாந்தர் ந மத்யம் ந பஹி: ஸ்மரந்த:
கௌபீநவந்த: கலு பாக்யவந்த: ॥

**देहादिभावं** – சரீரம் முதலியவைகளின் தன்மையை, **परिमार्जयन्तः**–நன்கு முழுவதும் துடைத்து போக்கிக்கொண்டவர்களும், **आत्मनि**–மனதில், **आत्मानं**–ஆத்ம வஸ்துவை, **अवलोकयन्तः**–பார்க்கின்றவர்களும், **अन्तः**–உள்ளேயும், **मध्यं**–நடுவையும், **बहिः**–வெளியிலும், **न स्मरन्तः**–நினைக்காதவர்களுமான, **कौपीनवन्तः**-யதிகள், **भाग्यवन्तः**-பாக்யசாலிகள்.

நாம் ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் தேஹாதிகளில் அபிமானம்கொண்டு அவைகளை 'நான்' என்று எண்ணுகிறோம். நாம் தேஹமாகவே இருக்கிறோம். பரிசுத்தமான ஆத்மாவுக்கு இந்த தேஹத்தன்மை என்ற அழுக்கு ஏற்பட்டிருக்கிறது. யதிகள் ஞானம் என்ற சுத்த ஜலத்தால் அழுக்கைப் போக்கிக்கொண்டுவிட்டனர். ஒரு பொழுதும் தேஹாதிகளை நான் என எண்ணமாட்டார்கள். ஆத்மாவையே தன் ஸ்வரூபமாக நேரில் பார்த்துக்கொண்டிருப்பார்கள். ஆத்மாவைத்தவிற வேறு ஒன்றையும்

உள்ளே இருந்தாலும் வெளியே இருந்தாலும் நடுவில் இருந்தாலும் நினைத்துப்பார்க்கமாட்டார்கள். (3)

स्वानन्दभावे परितुष्टिमन्तः संशान्तसर्वेन्द्रियदृष्टिमन्तः ।
अहर्निशं ब्रह्मणि ये रमन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥

ஸ்வாநந்த பாவே பரிதுஷ்டிமந்த:
ஸம்ஶாந்த ஸர்வேந்த்ரிய த்ருஷ்டிமந்த: ।
அஹர்நிஶம் ப்ரஹ்மணி யே ரமந்த:
கௌபீநவந்த: கலு பாக்யவந்த: ॥

**ये**-எவர்கள், **स्वानन्दभावे**-ஆத்மானந்த ஸ்வரூபத்தில், **परितुष्टिमन्तः**-ஸந்தோஷம் அடைபவர்களும், **संशान्तसर्वेन्द्रियदृष्टिमन्तः**-எல்லா இந்திரியங்களின் அறிவும் அடங்கியவர்களும், **अहर्निशं**-இரவும் பகலும், **ब्रह्मणि**-ப்ரஹ்மத்தில், **रमन्तः**-இன்புறுகின்றவர்களுமாக (இருக்கின்றனரோ, அந்த) **कौपीनवन्तः**-யதிகள், **भाग्यवन्तः**-பாக்யசாலிகள்.

ஆத்மா ஆனந்தரூபம். இதைத்தெரிந்து கொள்ளாததால் ஆனந்தம் அடைய வெளிப்பொருள்களைத் தேடிச் செல்கிறோம். ஆத்மானந்தத்தை அறிந்துகொண்ட ஞானிகள் அதிலேயே ஸந்தோஷப்படுவார்கள். வெளிப்பொருள்களைத் தேடிச் செல்லமாட்டார்கள். கண் காது முதலான இந்திரியங்களையும், மனதையும் அதன் போக்குப்படிவிட்டு வெளி விஷயங்களை அறிந்து கொண்டிருக்கிறபடியால்தான் ஆத்மானந்தம் தெரிவதில்லை. ஞானிகள் வெளி விஷயங்களில் போகமுடியாதபடி இந்திரியங்களையும் மனதையும் அடக்கிவிடுவார்கள். அப்பொழுது ப்ரஹ்மஸ்வரூபம் பிரகாசிக்கும். அதிலேயே ஆனந்தம் அடைவார்கள். (4)

पञ्चाक्षरं पावनमुच्चरन्तः पतिं पशूनां हृदि भावयन्तः ।
भिक्षाशना दिक्षु परिभ्रमन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥

பஞ்சாக்ஷரம் பாவநமுச்சரந்த:
பதிம் பஶூநாம் ஹ்ருதி பாவயந்த: ।
பிக்ஷாஶநா திக்ஷு பரிப்ரமந்த:
கௌபீநவந்த: கலு பாக்யவந்த: ॥

**पावनं**-பரிசுத்தியைக் கொடுக்கும், **पंचाक्षरं**-பஞ்சாக்ஷர மந்திரத்தை, **उच्चरन्तः**-ஜபித்துக்கொண்டும், **हृदि**-மனதில் **पशूनां पतिं**-பசுபதியான பரமேசுவரனை, **भावयन्तः**-தியானம் செய்துகொண்டும், **भिक्षाशनाः**-பிக்ஷை எடுத்துக்கிடைக்கும் அன்னத்தை உண்பவர்களாய், **दिक्षु**-திசைகள் எங்கும், **परिभ्रमन्तः**-சுற்றிக்கொண்டும் இருக்கிற, **कौपीनवन्तः**-யதிகள், **भाग्यवन्तः**-மிகுந்த பாக்யசாலிகள்.

வாக்கில் பஞ்சாக்ஷர மந்திரஜபமும், மனதில் ஈசுவர தியானமும் செய்துகொண்டும் பிக்ஷான்னத்தாலேயே பசியை தீர்த்துக்கொண்டும் ஓரிடத்திலும் நிலைத்து நிற்காமல் எங்கும் ஸஞ்சாரம் செய்து வருகின்ற யதிகள்தான் இவ்வுலகில் எல்லோரையும்விட மிகுந்த பாக்யசாலிகள். (5)

யதிபஞ்சகம் முற்றிற்று.



॥ श्रीः ॥

# ॥ मायापञ्चकम् ॥

## மாயாபஞ்சகம்.

[ப்ரஹ்ம ஸ்வரூபத்தை மறைத்து உலகத்தைத் தோற்று வித்து, நம் ஸ்வரூபத்தையே மறந்து தேஹாதிகளையே நான் என எண்ணி பிரபஞ்ச வியாபாரத்தில் உழலும்படி நம்மை ஆட்டுவிக்கும் மாயையின் லீலைகளை ஐந்து சுலோகங்களில் விவரிக்கிறார். ப்ரஹ்ம ஸ்வரூபமும் இங்கு காட்டப்படுகிறது.]

निरुपमनित्यनिरंशकेऽप्यखण्डे
मयि चिति सर्वविकल्पनादिशून्ये ।
घटयति जगदीशजीवभेदं
त्वघटितघटनापटीयसी माया ॥ १ ॥

நிருபம நித்ய நிரம்ஶகேऽப்யகண்டே
மயி சிதி ஸர்வ விகல்பநாதி ஶூந்யே ।
கடயதி ஜகதீஶ ஜீவ பேதம்
த்வகடித கடநா படீயஸீ மாயா ॥

**निरुपम**-ஒப்பற்றதும், **नित्य**-அழிவற்றதும், **निरंशके**-கூறு போட முடியாததும், **अखण्डे**-பிரிவு அற்றதும், **सर्वविकल्पनादिशून्ये**-வேற்றுமை முதலியது எல்லாம் இல்லாததும், **चिति**-ஞான ஸ்வரூபமுமான, **मयि अपि**-என்னிடமும், **जगदीशजीवभेदं**—உலகம், ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமையை, **घटयति**-சேர்த்து வைக்கிறது, **अघटितघटनापटीयसी**-சேரமுடியாததைச் சேர்த்துவைப்பதில் மிகத் திறமையுள்ள, **माया**-மாயை.

நான் என்பது உண்மையில் ஆத்மாதான். அது ஒன்றே. சுத்த ஞானவடிவமானது அது. அந்த ஆத்மா போன்ற வேறொரு வஸ்து கிடையாது. ஆனால், நாம்

தேஹாதிகளையே ஆத்மா என எண்ணி நம்மைப்போல பல ஆத்மாக்கள் இருப்பதாக எண்ணுகிறோம். ஆத்மா அழி வற்றது, பிரிக்கவோ, கூறுபோடவோ முடியாதது. ஒரு தர்மமும் அதில் கிடையாது. ஆனல் நாம் ஆத்மா அழிந்து போவதாகவும், பல பிரிவுகளும், தர்மங்களும் இருப்பதாக வும் நினைக்கிறோம். இதுமட்டுமா? நம்மைக்காட்டிலும் வேருக அநேக உலகங்களும், அநேக ஈசுவரர்களும் அநேக ஜீவர்களும் இருப்பதாகவும் எண்ணுகிறோம். உண்மைக்கு மாருக நாம் நினைப்பதற்குக் காரணம் மாயைதான். மாயை யின் லக்ஷணமே அதுதான். இல்லாததை இருப்பதாகக் காட்டுவதுதான் மாயை என்பது. மாங்கொட்டையை பூமியில் ஊன்றி ஐந்தே நிமிஷங்களில் மாமரத்தைக் காட்டு கிருன். இதை மாயை என்றும், அவனை மாயாவி என்றும் உலகில் கூறுகிறோம். இதுபோலத்தான் பெரிய மாயை உலகத்தைக் காட்டுகிறது. (1)

(அ) முதல் சுலோகத்தில் கூறியுள்ள மூன்று பேதங் களில் மாயிகமான ஜகத் பேதத்தை இரண்டு சுலோகங் களில் காட்டுகிருர்:—

**श्रुतिशतनिगमान्तशोधकान-**
**प्यहह धनादिनिदर्शनेन सद्यः ।**
**कलुषयति चतुष्पदाद्यभिन्नान्**
**अघटितघटनापटीयसी माया ॥ २ ॥**

ச்ருதிஶத நிகமாந்த ஶோதகாந-
ப்யஹஹ தநாதி நிதர்ஶநேந ஸத்ய: ।
கலுஷயதி சதுஷ்பதாத்யபிந்நான்
அகடித கடநா படீயஸீ மாயா ॥

**अघटितघटनापटीयसी**-சேரமுடியாததைச் சேர்த்துவைப் பதில் மிகத்திறமையுள்ள, **माया**-மாயையானது, **श्रुतिशत-निगमान्तशोधकानपि**-நூற்றுக்கணக்கான ச்ருதிகளையும்,

உபநிஷத்துக்களையும் பரிசோதித்துப் பார்ப்பவர்களையும், **धनादिनिदर्शनेन**–பணம் முதலானவைகளைக் காட்டுவதனுல், **सद्यः**–உடனேயே, **चतुष्पदाद्यभिन्नान्**–நாலுகால் பிராணிகளைக் காட்டிலும் விசேஷம் இல்லாதவர்களாக, **कलुषयति**–கலங்க வைக்கிறது. **अहह**–ஆச்சர்யம்!

வேதம், சாஸ்திரம் முதலியவைகளைக்கற்று உபநிஷத்துக்களை விசாரித்து அதன் தாத்பர்யத்தைக்கண்டு பிடித்துப் பிறருக்கு உபதேசம் செய்யும் சிறந்த அறிவாளிகள் கூட உலக வியவஹாரத்தில் ஈடுபடும்பொழுது அபிமானத்தால் பணம் முதலியவைகளைக்கண்டு மயங்குகின்றனர். அப்பொழுது அவர்களுடைய படிப்பு உபயோகப்படுவதில்லை. எல்லாம் தெரிந்தவர்களும் அறிவில்லாத பசுக்களைப் போல அபிமானத்தால் ஈடுபடுகின்றனர் என்ருல் இது மாயையின் கார்யம்தான். இந்த சுலோகத்தின் கருத்தை ஸூத்ரபாஷ்யத்தின் ஆரம்பத்தில் அத்யாஸ பாஷ்யத்தில் ஆசார்யாள் நன்கு காட்டியிருக்கிருர்கள். அதாவது:—அக்ஞானத்தால் ஆத்மதர்மத்தை அனுத்மாவிலும், அனுத்மாவையும் அதன் தர்மங்களையும் ஆத்மாவிலும் ஆரோபம் செய்து இந்த அத்யாஸத்தால் தான் உலகில் எல்லா வியவஹாரங்களும் நடப்பதாக முதலில் கூறப்பட்டது. இதன்மேல் பாமரர்களுக்கு அத்யாஸம் ஏற்படலாம். படித்தவர்களுக்குக் கூடவா அத்யாஸம் என்ற கேள்வி ஏற்பட்டு இதற்கு பதில் கூறுகிருர் :– '**पश्वादिभिश्चाविशेषात्...अतः समानः पश्वादिभिः पुरुषाणां व्यवहारः**' படிப்பு என்ற விசேஷம் பசுக்களைவிட அதிகமாக மனிதனிடம் இருந்தாலும் உலக வியவஹாரத்தில் நாலுகால் பிராணிக்கும் மனிதனுக்கும் வித்யாஸம் இல்லை. கையில் புல்லை வைத்துக்கொண்டு ஒருவன் வந்தால் ராகத்தால் பசு அவனிடம் நெருங்கிச் செல்கிறது. கையில் தடியுடன் ஒருவன் வந்தால் அவனை விட்டு விலகிச் செல்கிறது. அதுபோல் தனக்கு வேண்டிய பணம் முதலானவை கிடைக்குமானுல் அவனிடம் அன்

புடன் பழகுகிறேம். நமக்குத் தீங்கு செய்பவனை வெறுப் பினுல் ஒதுக்கித் தள்ளுகிறேம். ஆகவே ஒன்றில் ராகமும் மற்றென்றில் த்வேஷமும் கொண்டு காரியங்களை நடத்து வது என்ற விஷயத்தில் பசுக்களைப் போலவேதான் படித்த மனிதனும் இருக்கிருன். இதற்குக் காரணம் மாயைதான்.

सुखचिदखण्डविबोधमद्वितीयं
वियदनिलादिविनिर्मिते नियोज्य ।
भ्रमयति भवसागरे नितान्तं
त्वघटितघटनापटीयसी माया ॥ ३ ॥

ஸுக சிதகண்ட விபோதமத்விதீயம்
வியதநிலாதி விநிர்மிதே நியோஜ்ய ।
ப்ரமயதி பவஸாகரே நிதாந்தம்
த்வகடிதகடநாபடீயஸீ மாயா ॥

सुखचिदखण्डविबोधं-ஆனந்தம், சைதன்யம், அறிவு ஸ்வரூபமானதும், பிரிவில்லாததும், अद्वितीयं—இரண்டாவது வஸ்து இல்லாததுமான ஆத்மாவை, वियदनिलादिविनिर्मिते-ஆகாசம், வாயு முதலியவைகளால் உண்டுபண்ணப்பட்ட (பாஞ்சபௌதிகமான) சரீரத்தில், नियोज्य-சேர்த்து, अघटितघटनापटीयसी — சேராததைச் சேர்த்துவைப்பதில் திறமையுள்ள, माया-மாயை, भवसागरे-ஸம்ஸார ஸாகரத் தில், नितान्तं-மிகவும், भ्रमयति-சுழலும்படி செய்கிறது.

ஆத்மா ஆனந்தரூபம், சைதன்யம், ஞானவடிவம். ஒரே வஸ்து. பிரிக்கமுடியாதது. சரீரமோ துக்கரூபம், ஜடம். பல பிரிவுகளுள்ளது. பஞ்சபூதங்களால் உண்டானது. ஒன்றுக்கொன்று கொஞ்சமும் ஸம்பந்தம் இல்லை. ஆனாலும் ஆத்மாவை சரீரத்துடன் சேர்த்து, சரீரத்தையே நான் என்று எண்ணச் செய்து, ஸம்ஸாரத்தில் உழலச் செய்வது மாயைதான். (3)

(அ) ஜீவபேதம் மாயிகம் என்பதைக் காட்டுகிறார் :—

अपगतगुणवर्णजातिभेदे
सुखचिति विप्रविडाद्यहंकृतिं च ।
स्फुटयति सुतदारगेहमोहं
त्वघटितघटनापटीयसी माया ॥ ४ ॥

அபகத குண வர்ண ஜாதி பேதே
ஸுகசிதி விப்ர விடாத்யஹங்க்ருதிம் ச ।
ஸ்புடயதி ஸுத தார கேஹ மோஹம்
த்வகடித கடநா படீயஸீ மாயா ॥

अपगतगुणवर्णजातिभेदे-குணம், வர்ணம், ஜாதி இவைகளின் வேற்றுமைகள் அற்றதும், सुखचिति-ஆனந்த சைதன்ய ரூபமுமான ஆத்மாவில், विप्रविडाद्यहंकृतिं च-பிராம்மணன், வைச்யன் முதலான அஹங்காரத்தையும், सुतदारगेहमोहं-பிள்ளை, மனைவி, வீடு இவைகளில் எனது என்ற மயக்கத்தையும், अघटितघटनापटीयसी माया-சேராததைச் சேர்ப்பதில் திறமையுள்ள மாயை, स्फुटयति-தெளிவாகக் காட்டுகிறது.

ஆத்மா ஆனந்தவடிவம். ஞானஸ்வரூபம். அதில் ஜாதி, நிறம், குணம் முதலான வேற்றுமைகள் ஒன்றும் கிடையாது. இவைகள் எல்லாம் சரீரத்தைச் சேர்ந்தவை. ஒரு சரீரம் பிராமண ஜாதியாகவும் மற்றோர் சரீரம் வைச்ய ஜாதியாகவும், ஒன்று கறுப்பு நிறமுள்ளதாகவும், மற்றது சிவப்பாகவும் இவ்வாறே வெவ்வேறு குணங்கள் உள்ளதாகவும் உலகில் காண்கிறோம். சரீர விலக்ஷணமான ஆத்ம வஸ்துவைத் தெரிந்துகொள்ளாததால் இவைகள் எல்லாம் ஆத்மாவில் இருப்பதாக எண்ணி, நான் மனிதன், பிராஹ்மணன், சிவப்பு, என்றெல்லாம் சொல்கிறோம். இதுமட்டுமா? சரீரத்தை நான் என எண்ணுவதால் சரீரத்துடன் ஸம்பந்தப்பட்ட பிள்ளை, மனைவி, வீடு, பொருள் முதலியவைகளில்

'என்னுடையது' என அபிமானம் கொண்டு மோஹத்தை அடைகிறோம். இது மாயையின் காரியம். (4)

(அ) ஈசுவரபேதம் மாயிகம் என்பதைக் காட்டுகிறார்:-

विधिहरिहरभेदमप्यखण्डे
बत विरचय्य बुधानपि प्रकामम् ।
भ्रमयति हरिहरविभेदभावान्
अघटितघटनापटीयसी माया ॥ ५ ॥

விதி ஹரி ஹர பேதமப்யகண்டே
பத விரசய்ய புதாநபி ப்ரகாமம் ।
ப்ரமயதி ஹரி ஹர விபேத பாவான்
அகடிதகடநா படீயஸீ மாயா ॥

**अघटितघटनापटीयसी**—சேரமுடியாததைச் சேர்த்து வைப்பதில் திறமையுள்ள, **माया**-மாயையானது, **अखण्डेपि**-பிரிக்கமுடியாத ப்ரஹ்மத்திலும், **विधिहरिहरभेदं**-ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் என்ற வேற்றுமையை, **विरचय्य**-ஏற்படுத்தி **बुधानपि** — படித்தவர்களையும், **हरिहरविभेदभावान्** — விஷ்ணுவிடமும், சிவனிடமும், வேற்றுமை உணர்ச்சி உள்ளவர்களாக, **प्रकामं**-மிகவும், **भ्रमयति**-மயக்கமுறச் செய்கிறது.

உண்மையில் ஈசுவரன் ஒருவனாயிருந்தாலும் அதை மறந்து ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் முதலான அநேகம் ஈசுவரர்கள் இருப்பதாகவும், அவர்களில் ஒருவருக்கொருவர் ஏற்றத்தாழ்வு இருப்பதாகவும் கல்பித்துக்கொண்டு படித்தவர்கள்கூட இவ்விஷயத்தில் வியவஹாரம் செய்கின்றனர். இது மாயையின் லீலையே. ஜீவர்கள், ஜகத் என்ற வேற்றுமையே உண்மையில் இல்லாதபொழுது அகண்ட ப்ரஹ்ம சைதன்யத்தில் ஈசுவர பேதம் எப்படி இருக்கமுடியும்? மேலும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்கள் சேர்ந்ததுதான் மாயை என்பது. மாயையுடன் சேர்ந்த

சைதன்யம்தான் ஈசுவரன். இதில் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களின் ப்ராதான்யத்தைக்கொண்டு முறையே விஷ்ணு, ப்ரஹ்மா, சிவன் என்ற மூர்த்தி பேதம் தோன்றியது என்பதுதான் சாஸ்திரங்களின் ஸித்தாந்தம். ஆகவே மூர்த்தி பேதமும் மாயிகமே.

இவ்வாறு ப்ரஹ்மசைதன்யம் ஒன்றைத் தவிற மற்றவை எல்லாம் மாயா விலாஸம் என்பதைத் தெரிந்துகொண்டால் ராக த்வேஷங்கள் விலகி அத்வைத ப்ரஹ்மசைதன்யத்தை சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். (5)

மாயாபஞ்சகம் முற்றும்.



|| श्रीः ||



|| मनीषापञ्चकम् ||

# மநீஷா பஞ்சகம்.

---

[மநீஷாபஞ்சகம் என்ற உபதேச மொழிகள் தொகுத்த ஹாரத்தை ஒவ்வொருவரும் ஸதா தாரணம் செய்துகொண்டிருக்கவேண்டும் என்று பகவத்பாதாள் தீர்மானம் செய்துள்ளார் போலும். இல்லையேல், வேதத்தின் பரம தாத்பர்யமாயுள்ள ब्रह्म सत्यं जगन्मिथ्या (ப்ரஹ்ம ஸத்யம் ஜகந்மித்யா) என்ற தத்வத்தை சுலபமான வழியில் ஐந்து சுலோகங்களுக்குள் அடக்கியிருக்கமாட்டார்கள். வேதாந்தத்தை மட்டும் தனியாகப் படித்து அநுஷ்டானத்துக்குக் கொண்டு வருவது கடினம். ஆசார அநுஷ்டானங்களுக்கும் தத்துவ தர்சனத்துக்கும் விரோதம் உள்ளதுபோல் காணும். ஸாமான்ய மனுஷ்யனுக்குத் தோன்றக்கூடிய ஸந்தேஹம் "ஸர்வம் அத்வைத ப்ரஹ்மம் என்றபோது வர்ணாசிரம தர்மம் எதற்கு? மனிதனுக்கு மனிதன் வித்யாஸம் எப்படி இருக்க முடியும்?" என்பது. இதை நிவர்த்திக்க எண்ணி எது எந்த நிலையில் எப்படித்தோன்றும் என்பதை பகவத்பாதாள் இந்த ஐந்து சுலோகங்களில் எடுத்துக்காட்டிவிட்டார்கள்.

வர்ணாசிரம தர்மம் தேவை இல்லை என்று பகவத்பாதாள் பொதுவாக ஓரிடத்திலும் சொல்லவில்லை वर्णाश्रमप्रतिष्ठात्रे नमः (வர்ணாச்ரம ப்ரதிஷ்டாத்ரே நம:) என்று அவருடைய அஷ்டோத்தரத்தில் ஓர் நாமா காணப்படுகிறது. ஆனால் அவரே அத்வைதஸ்தாபனாசார்யர். இவ்விரண்டுக்கும் மேல் பார்வையில் விரோதம் தோன்றினாலும் தீர ஆலோசனை செய்து பார்த்தால் அவ்வித்யாஸம் மறையும். ஞானம் ஏற்படும் வரையில் வர்ணாசிரம பேதங்கள் இருக்கத்தான் இருக்கும். இருக்கத்தான் வேண்டும். ஸ்வகர்மாக்களை சரிவர செய்து சித்த சுத்தி பெற்று ஞானம் வந்ததும் இந்த வித்யாஸங்கள் தானாகவே மறைந்து போகும். இந்த ஞானிக்கு எல்லாம் ஆத்ம ஸ்வரூபமாகத்தோன்றும். இந்த நிலையைத் தான் பகவத்பாதாள் இந்தச் சிறிய கிரந்தத்தில் விளக்கி

யுள்ளார்கள். இதனுல் வர்ணுசிரம தர்மம் அவசியமில்லை என்று எல்லோருக்கும் சொல்லிவிட்டதாய் எண்ணிவிடக் கூடாது.]

(அ) பகவத்பாதாள் காசீ ஷேத்திரத்துக்குச் சென்ற போது அவருடைய பெருமையை உலகுக்கு எடுத்துக் காட்டவே கருணுமூர்த்தியான விசுவநாதர் சண்டாள வேஷம் பூண்டு இந்த லீலையை செய்துள்ளார். பகவத் பாதாள் முன்பு சண்டாள ரூபத்துடன் தோன்றினுர். அவர் வேஷத்தைக் கண்ட பகவத்பாதாள் "விலகிச் செல்" என்ருர். இது கேட்டு சண்டாள வேஷம் தரித்திருக்கும் ப்ரமசிவன் கூறுகிருர் :—

अन्नमयादन्नमयं अथवा चैतन्यमेव चैतन्यात् ।
यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं ब्रूहि गच्छ गच्छेति ॥

அன்னமயாதன்னமயம்
அதவா சைதன்யமேவ சைதன்யாத் ।
யதிவர தூரீகர்தும்
வாஞ்சஸி கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி ॥

**यतिवर**-சிறந்த ஸந்யாஸியே, **अन्नमयात्**-அன்னத்தி லிருந்து உண்டான சரீரத்திலிருந்து, **अन्नमयं**-அன்னத்தி லிருந்து உண்டான சரீரத்தையா? **अथवा**-அல்லது, **चैतन्यात्**-சைதன்யத்திலிருந்து, **चैतन्यमेव**-சைதன்யத்தைத் தானு? **किं**-எதை, **गच्छ गच्छ**-போ போ, **इति**-என்று, **दूरीकर्तुं**-தூரத்தில் விலக்குவதற்கு, **वांछसि**-விரும்புகிருய், **ब्रूहि**-சொல்.

ஒரு சரீரத்திலிருந்து மற்ருேர் சரீரத்தை விலகிப் போகச் சொல்கிருயா? அல்லது சைதன்யத்திலிருந்து சைதன்யத்தை விலகச்சொல்கிருயா? என்று கேட்கிருர். விசாரித்துப் பார்த்தால் இரண்டும் தப்பு. இரண்டு சரீரங் களுக்கும் அன்னம்தான் காரணம். சரீரம் அன்ன ரஸமயம் என்று தைத்திரீய உபநிஷத் கூறுகிறது. ஒரே காரணத்தி

விருந்து உண்டான இரு வஸ்துக்கள் வெவ்வேறு ஸ்வபாவ முள்ளதாக எவ்விதம் இருக்கமுடியும்? இங்கு சரீரம் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது. பிரபஞ்சம் முழுவதற்கும் ஒரே ப்ரகிருதி காரணமாயிருப்பதால் எல்லாம் மாயிகம் என்பதையும் மறைமுகமாகக் காட்டுகிறார். "ப்ரகிருதி எட்டு விதம்" (**भिन्ना प्रकृतिरष्टधा**) என்று கீதையில் கூறியிருப்பது ஒரே மூலப்ரகிருதியின் அவஸ்தாபேதங்கள்தான். சைதன் யத்தையும் விலகச்சொல்ல முடியாது. அது ஒன்று. எங்கும் நிறைந்தது. இரண்டு சைதன்யம் கிடையாது. வியாபக மான வஸ்துவை எப்படி விலகச்சொல்ல முடியும்.? ஆகாசத்தை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போகச்செய்ய முடியுமா? ஆகவே இரண்டுவிதத்திலும் நீ கூறும் வார்த்தை பொருத்தமாக இல்லை. இரண்டு சரீரங் களும் ஒரே அன்னத்திலிருந்து ஏற்பட்டவை. இரண்டிலும் உள்ள சைதன்யம் ஒன்றே. இவ்விதம் இருக்க ஒருவர் மற்றவரை நிந்திப்பது உசிதம் அல்ல என்றார் சண்டாள வேஷதாரியான பரமசிவன்.

(அ) சைதன்ய ஸ்வரூபத்தில் வேற்றுமை இல்லை என்பதை விளக்கிக் காட்டுகிறார் :—

**प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दावबोधाम्बुधौ**
**विप्रोयं श्वपचोऽयमित्यपि महान् कोऽयं विभेदभ्रमः ।**
**किं गङ्गाम्बुनि विम्बितेऽम्बरमणौ चाण्डालवीथीपयः-**
**पूरे वाऽन्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोर्वाऽम्बरे ॥**

ப்ரத்யக்வஸ்துனி நிஸ்தரங்கஸஹஜாநந்
தாவபோதாம்புதௌ
விப்ரோயம் ச்வபசோயமித்யபி மஹான் கோயம்
விபேதப்ரமः ।
கிம் கங்காம்புநி பிம்பிதேऽம்பரமணௌ சாண்டாளவீதிபயः-
பூரே வாந்தரமஸ்தி காஞ்சநகடீம்ருத்கும்பயோர்வாம்பரே ॥

**निस्तरङ्ग**—அலையில்லாத, **सहज**—ஸ்வபாவஸித்தமான, **आनन्दावबोधाम्बुधौ**-ஆனந்த ஞானக்கடல் ரூபமான, **प्रत्यग्वस्तुनि**-ஆத்மவஸ்துவில், **अयं**-இவன் **विप्रः** – அந்தணன், **अयं श्वपचः** – இவன் நாய் மாம்ஸம் தின்பவன், **इति** – என்று, **अयं**-இது, **कः** –என்ன, **महान्** – பெரிய, **विभेदभ्रमः**–வேற்றுமை பிராந்தி (வேற்றுமை அறிவு ஏற்படவே இடமில்லையே), **गङ्गाम्बुनि** – கங்கா ஜலத்திலும், **चाण्डालवीथीपयःपूरे** – சேரியிலுள்ள நீர்க்குட்டையிலும், **विम्बिते**–பிரதிபிம்பித்த, **अम्बरमणौ वा**–சூரியனிடத்திலோ, **काञ्चनघटीमृत्कुम्भयोः** – தங்கக் குடம், மண் குடங்களின், **अम्बरे वा**—ஆகாசத்திலோ **अन्तरं**—வேற்றுமை, **किं अस्ति**-இருக்கிறதா ?

ஆத்மா ஸத்ரூபம், எப்பொழுதும் எங்கும் எல்லாமாகவுமிருப்பது. தேஹாதிகளோ அஸத்து, அதாவது பொய்யானது. ஆத்மா ஞானஸ்வரூபம், அவை ஜடம். ஆத்மா ஆனந்தரூபம், அவை துக்கரூபம். ஆத்மாவுக்கும் தேஹாதிகளுக்கும் இவ்வாறு நேர் எதிரிடையான ஸ்வபாவமிருப்பதால் ஸச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மா தேஹாதிகளைவிட விலக்ஷணமானது. இந்த ஆத்ம ஸ்வபாவத்திற்கு அழிவோ, மாறுபாடோ, அசைவோ ஒருக்காலும் கிடையாது. ஸச்சிதானந்தம் என்பது ஆத்மஸ்வரூபமே தவிர ஆத்மாவின் தர்மம் அல்ல. இந்த ஆத்மா ஒன்றே. இவ்விதமான ஆத்மாவில் பிராஹ்மணன், சண்டாளன் என்ற வேற்றுமை எப்படி உண்டாகும்?

பசுவின் பால் சுத்தமாயிருந்தாலும், அதைத் தோலில் வைத்தால் அசுத்தமாவதுபோல ஆத்மா ஸச்சிதானந்த ரூபமாயிருந்தாலும் சரீர ஸம்பந்தத்தால் தோஷம் ஏற்படலாமோவெனில், அதற்குப் பதில் கூறுகிறார். ஆகாயத்தில் உள்ள ஒரே சூரியன் கங்காஜலத்திலும் தோன்றுகிறான் சேரியிலுள்ள நீர்க் குட்டையிலும் தோன்றுகிறான். இதனால் சூரியனிடம் வேற்றுமையோ, தோஷமோ ஏதாவது ஏற்படுமா? தங்கக் குடத்திலுள்ள ஆகாசத்திற்கும் மண்

குடத்திலுள்ள ஆகாசத்திற்கும் ஏதாவது வேற்றுமை உண்டா? ஒரே சூரியனைப் பலவாகக் காட்டும் நீருக்கும், ஆகாசத்தை வெவ்வேறுகக் காட்டும் குடத்திற்கும் உபாதி என்று பெயர். உபாதியில் பேதம், குணம், தோஷம் எல்லாம் இருக்கலாம். இந்த உபாதி தர்மங்கள் உபஹித மான வஸ்துவில் சேராது. ஜலத்திலுள்ள தோஷமோ, குணமோ சூரியனுக்குக் கிடையாது. குடம் வெவ்வேரு யிருந்தாலும் அதில் தோன்றும் ஆகாசத்திற்கு வேற்றுமை கிடையாது. இதுபோல் ஒரே ஆத்மா பல சரீரங்களில் தோன்றினும் சரீரங்களிலுள்ள வேற்றுமையோ, தோஷமோ ஆத்மாவிற்குக் கிடையாது. பால், தோல் இரண்டும் உண்மைப் பொருள். தோலினுல் பாலுக்குத் தோஷம் ஏற்படலாம். ஆத்மா உண்மை, தேஹம் பொய். பொய்யான தேஹத்தில் தோன்றுவதால் உண்மையான ஆத்மாவிற்கு எப்படி தோஷம் ஏற்படும்? ஆகவே எல்லா சரீரங்களிலும் ஒரே ஆத்மா தோன்றும்பொழுது எப்படி விலகிப்போகும்படி சொல்லலாம் என்று கேட்டார் விசுவநாதர்.

இவ்வாறு சண்டாள வேஷத்துடன் வந்த பரமேசுவரரின் வார்த்தைகளைக்கேட்டு, ஆத்மானந்த நிலையை யடைந்தும் விக்ஷேபத்தால் அதில் நிலைத்து நிற்கமுடியாமல் இருக்கும் உத்தமாதிகாரிகளுக்கு ஆத்மானந்தம் நிலைபெறும் பொருட்டு ஐந்து சுலோகங்களால் தன் அனுபவத்தை வெளியிடுகிருர். இதில் முதல் சுலோகத்தில் (ब्रह्म सत्यं) ப்ரஹ்மம் ஒன்றுதான் உண்மைப்பொருள் என்பதையும் 2வது சுலோகத்தில் (जगन्मिथ्या) உலகம் பொய் என்பதையும் 3வது சுலோகத்தில் ஞானுனுபவ ஸாதனமான வாஸனுக்ஷய மனோநாசங்களையும் ஞானப்பயனுன கர்ம நாசத்தை யும் 4-வது சுலோகத்தில் ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியையும் 5-வது சுலோகத்தில் அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியையும் காட்டுகிருர்.

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञापि यस्यास्ति चेत्
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥

ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்திஷு ஸ்புடதரா யா
ஸம்விதுஜ்ஜ்ரும்பதே
யா ப்ரஹ்மாதி பிபீலிகாந்ததனுஷு ப்ரோதா
ஜகத்ஸாக்ஷிணீ ।
ஸைவாஹம் ந ச த்ருச்யவஸ்த்விதி த்ருடப்ரஜ்ஞாபி
யஸ்யாஸ்தி சேத்
சாண்டாளோஸ்து ஸ து த்விஜோஸ்து
குருரித்யேஷா மநீஷா மம ॥

**जाग्रत्स्वप्नसुषुप्तिषु**-நனவு, கனவு, தூக்கம் இம் மூன்று நிலைகளிலும், **या संवित्** - எந்த சைதன்யம், **स्फुटतरा**-மிகத் தெளிவாக விளங்குகிறதோ, **जगत्साक्षिणी**-உலகை நேரில் காண்கிற, **या**-எது, **ब्रह्मादिपिपीलिकान्ततनुषु**-ப்ரஹ்மா முதல் எறும்பு வரை உள்ள பிராணிகளின் சரீரங்களில், **प्रोता**-ஊடுருவியிருக்கிறதோ, **सैव**-அதுதான், **अहं**-நான், **दृश्यवस्तु**-அறியப்படும் வஸ்து, **न च**-(நான்) அல்ல. **इति**-என்று, **यस्य**-எவன் ஒருவனுக்கு, **दृढप्रज्ञा**-உறுதியான அறிவு, **अस्ति चेत्**-இருக்குமானல், **सः**-அவன், **चाण्डालोस्तु**-சண்டாளனுக இருக்கட்டும் **तु**-அல்லது, **द्विजोस्तु**-பிராமணனுயிருக்கட்டும், **गुरुः**-அவன் குரு, **इति एषा**-என்ற இது, **मम**-என்னுடைய, **मनीषा**-எண்ணம்.

கண், காது முதலான ஞானேந்திரியங்கள், மனம் இவைகளால் ரூபம் முதலான ஸ்தூல விஷயங்களை அறிந்து கொள்ளும் நிலைக்கு 'ஜாக்ரத்' என்று பெயர். வெளிப் புலன்கள் அடங்கி, மனமும் வெளிச்செல்ல முடியாமல் உள்ளேயே இருந்துகொண்டு வாஸனமயமான ஸூக்ஷ்ம பதார்த்தங்களைப் பார்க்கும்நிலைக்கு ஸ்வப்னம் என்று பெயர்,

இந்த மனமும் அக்ஞானத்தில் லயத்தை அடைந்த நிலைக்கு ஸுஷுப்தி என்று பெயர். இவைகளில் ஜாக்ரதவஸ்தையில் இந்திரியங்களும் மனமும் அறிவதாகவும், ஸ்வப்னத்தில் மனம் மட்டும் அறிவதாகவும் ஸுஷுப்தியில் ஒன்றும் தெரிய வில்லை என்றும் நாம் எண்ணிக்கொண்டிருக்கிறோம். இதற்குக் காரணம் தேஹம், இந்திரியம், மனம் முதலான வைகளைக் காட்டிலும் வேறான ஆத்மாவைத் தெரிந்து கொள்ளாமல், இவைகளையே ஆத்மாவாக நினைப்பதுதான். இது தவறு. இந்திரியங்களுக்கும் மனத்திற்கும் இயற்கையில் பிரகாசம் கிடையாது. அவை ஜடம். அவைகளுக்கு பிரகாசத்தைக் கொடுப்பது ஆத்ம சைதன்யம். இது இந்திரியங்கள் மூலம் பிரகாசிக்கிறது. ஸ்வப்னத்தில் மனமே அறியப்படும் விஷயங்களாக இருப்பதால் அங்கும் அறிவு ஆத்ம சைதன்யத்தால்தான். ஸுஷுப்தியில் இவை கள் ஒன்றும் இல்லாதபடியால் அங்கு ஏற்படும் அஞ்ஞானம், ஆனந்தம் இவைகளின் அநுபவம் ஆத்ம சைதன்யத்தால் தான். வெவ்வேறான அவஸ்தைகள் மாறி மாறி வந்தாலும், மூன்றிலும் ஒரே சைதன்யம்தான், தானும் பிரகாசித்துக் கொண்டு மற்றவைகளையும் பிரகாசப்படுத்துகிறது. இது போல் இந்த சரீரம்போய் மற்றோர் சரீரம் வந்தாலும் ஆத்மா ஒன்றுதான். சரீரம்தான் வெவ்வேறு. இதனால் ஆத்மா சரீரத்தைக் காட்டிலும் வேறு என்பதைக் காட்டினார். இது மட்டும் அல்ல, உலகிலுள்ள எல்லா பிராணிகளிடமும் ஒரே ஆத்மாதான் விளங்குகிறார். சேதனபிரபஞ்சத்தை மட்டும் அல்ல. எல்லா ஜடவர்க்கங்களையும் காட்டுகிறவர் அந்த ஆத்மாதான். இதனால் சரீர விலக்ஷணமான ஆத்மாவே ப்ரஹ்மம், அது ஞானஸ்வரூபம் என்று உபதேசித்தார்.

ஞானஸ்வரூபமான இந்த ஆத்மாவே நான். என்னால் அறியப்படும் தேஹாதிகள் நான் அல்ல என்ற ஞானம் எவனிடம் நிலைபெற்றிருக்கிறதோ அவனை எந்த ஜாதியாக உலகத்தோர் கூறினாலும் அவன் குரு என்பதுஎன் எண்ணம்.

இந்த ஞானம் நிலைபெற்றிராவிட்டால் சிலசமயம் தேஹாதிகளையும் நான் என்று எண்ண ஆரம்பித்துவிடுவான். அப்படியில்லாமல் வெகுகாலம் வேதாந்த சிரவணாதிகள் செய்து எப்பொழுதும் பரதத்வத்தைப்பற்றியே சிந்தனை செய்து வந்தால், அந்த அப்யாஸ பலத்தால் கண்முன் காணும் குடம்போல் ஆத்ம தத்வம் தானாகவே விளங்கி நிலைத்து நிற்கும். பல ஜன்மாக்களில் உள்ள பழக்கத்தால் யௌவன வயது வந்ததும் தானாகவே காம உணர்ச்சி தோன்றுவது போல் அப்யாஸ பலத்தால் ஆத்ம தத்வம் தானாகவே விளங்கும். அப்யாஸ பலத்தால்தானே மாரீசன் எங்கும் ராமனின் உருவத்தைக் கண்டான். இதுதான் உறுதியான ஞானம் என்பது. இந்த ஞானம் உள்ளவனுக்கு பிராரப்த கர்மாவினால் வந்த சரீரத்தில் நான் என்ற எண்ணமோ, அபிமானமோ சிறிதும் இல்லாததாலும், ஜாதி, குலம் முதலிய தர்மங்கள் அற்ற நித்ய சுத்தமான ப்ரஹ்மத்தையே தன் ஸ்வரூபமாகப் பார்ப்பதாலும் சரீரத்தால் ஏற்பட்ட உயர்வு தாழ்வுகள் அவனுக்குக் கிடையாது. உலகில் அவனே பெரியவன். அவன் அடைந்திருக்கும் நிலையை மற்றவர்கள் அடைவதற்கு அவன் வழிகாட்டியாகிறான். (1)

(அ) முதல் சுலோகத்தில் சைதன்யம் ஒன்றுதான் என்று கூறுவதன்முகமாக ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றே என்பதைக் கூறினார். இங்கு ஓர் ஸந்தேஹம் ஏற்படுகிறது. உபநிஷத்துக்களில் ப்ரஹ்மத்தை ஜகத்காரணமாக (படைத்துக் காப்பாற்றி அழிப்பதாக)க் கூறப்பட்டிருக்கிறது. ஜீவனுக்கோ இந்த சக்தி இல்லை. ஆகவே இரண்டும் வெவ்வேறாக இருக்க முடியுமே தவிர எப்படி ஒன்றாகமுடியும் என்று. இதற்கு ஸமாதானம் கூறுகிறார் :—

ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणया सेशं मया कल्पितम् ।

इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥

ப்ரஹ்மைவாஹமிதம் ஜகச்ச ஸகலம் சின்மாத்ரவிஸ்தாரிதம்
ஸர்வம் சைததவித்யயா த்ரிகுணயா ஸேஶம் மயா கல்பிதம் ।
இத்தம் யஸ்ய த்ருடா மதி: ஸுகதரே நித்யே பரே நிர்மலே
சாண்டாளோஸ்து ஸ து த்விஜோஸ்து குருரித்யேஷா
மநீஷா மம ॥

अहं-நான், ब्रह्मैव-ப்ரஹ்மமே, इदं-இந்த, जगच्च सकलं-உலகம் எல்லாம், चिन्मात्रविस्तारितं-கேவல ஞானவடிவமான ப்ரஹ்மத்தில் விரிவை அடைந்திருக்கிறது त्रिगुणया-ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணவடிவமான, अविद्यया-அவித்யை என்னும் ஸாதனம் கொண்டு, सेशं-ஈசுவரனுடன் கூடிய, एतत्-இது, सर्वं च-எல்லாம், मया-என்னால், कल्पितम-ஆரோபம் செய்யப்பட்டிருக்கிறது. इत्थं-இவ்வாறு, यस्य-எவனுக்கு, सुखतर-நிரதிசய ஆனந்த ஸ்வரூபமாயும், नित्ये-அழிவற்றதாயும், निर्मले-தோஷமற்றதாயும் உள்ள, परे-பரப்ரஹ்மத்தில், दृढा मतिः-திடமான புத்தி இருக்கிறதோ, सः-அவன், चाण्डालोस्तु-சண்டாளனுக இருக்கட்டும், तु - அல்லது, द्विजोस्तु - பிராமணனுக இருக்கட்டும் (அவன்) गुरुः-குரு, इति-என்ற, एषा-இது, मम-என்னுடைய, मनीषा-அபிப்பிராயம்.

ப்ரஹ்மம் ஒன்றே உண்மையான வஸ்து. அது சுத்த சைதன்ய ஸ்வரூபம். அதில் பிரபஞ்சம் தோன்றுகிறது. இது கிளிஞ்சல் என்ற உண்மையைத் தெரிந்துகொள்ளாதவன் ப்ராந்தியால் அதை வெள்ளியாகப் பார்க்கிருன். உண்மையில் வெள்ளி அங்கு இல்லை. இருப்பது கிளிஞ்சல் தான். கிளிஞ்சல் அதிஷ்டானம், வெள்ளி ஆரோபிதம். அது பொய். இதுபோலவே அதிஷ்டானமான ப்ரஹ்மத்தில் பிரபஞ்சம் ஆரோபிதம். ஆகையால் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் பிரபஞ்சம் வேருக இருக்கும் பொருள் அல்ல,

உண்மைப் பொருள் மறைந்து பொய்யான பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரணம் முக்குண வடிவமான மாயை தான். 'ஈசுவரன் ஜகத் காரண வஸ்து. ஜீவன் அப்படி யில்லையே. இரண்டும் எவ்விதம் ஒன்ருகும்' என்ற கேள் விக்கு பதில் இதுதான். ஜீவனும் ஜகத் காரணம்தான். ஜீவன்தான் தன் அவித்யையால் ஈசுவரன் முதல் எல்லா வற்றையும் கல்பிக்கிருன். அக்ஞானிதான் உலகைக் காண்கிருன். ப்ரஹ்மம் சரீரத்திற்குள் புகுந்து ஜீவஸ்வரூப மாக ஆகி உலகை ஸ்ருஷ்டி செய்கிறது என்று உபநிஷத்து கூறுகிறது. உண்மையில் விசாரித்துப் பார்த்தோமானுல் உலகம் பொய்யாக 'இருக்கும்பொழுது அதை ஈச்வரன் ஸிருஷ்டி செய்கிருன் என்பதும் பொய்தான். இந்த கல்பித தர்மங்களை எல்லாம் நீக்கிவிட்டோமானுல் ப்ரஹ்மம் சுத்த சைதன்யமாகத்தான் விளங்கும். அதுபோலவே ஜீவஸ்வ ரூபத்திலும் ஆரோபித தர்மங்களை அகற்றிவிட்டால் அதுவும் சுத்தசைதன்யம் தான். ஆகவே ஒரே லக்ஷணம் இருக்கிற படியால் இரண்டும் ஒன்றே. ப்ரஹ்மமே தான் ஜீவனுக ஆகி மறுபடியும் ஞானத்தால் ப்ரஹ்மமாகிருன். எவன் பொய்யான உலகத்தையும் தேஹாதிகளையும் விட்டு பிறப்பு, இறப்பு அற்றதும் ஆனந்த ஸ்வரூபமும், மாயை, பிரபஞ்சம் இவைகளின் ஸம்பந்தமில்லாததும் எல்லாவற்றிற்கும் மேல் பட்டதுமான ப்ரஹ்மத்தில் மனதைச்செலுத்தி அதையே தன் ஸ்வரூபமாக உறுதியுடன் காண்கிருனே, அவன் ப்ரஹ்ம ஸ்வரூபமே. அவன் சரீரம் எந்த ஜாதியாயிருந் தாலும் ப்ரஹ்மஸ்வரூபமாக விளங்கும் அவன் குரு என்பது எனது அபிப்பிராயம். (2)

(அ) ப்ரஹ்மம் ஸத்யம், உலகம் பொய், ஜீவனே ப்ரஹ்மம் என்ற விஷயம் இரு சுலோகங்களில் கூறப்பட்டது. இந்த ப்ரஹ்மஞானுனுபவத்திற்கு ஸாதனங்களான வாஸனு க்ஷய மனே நாசங்களையும், ஞானத்தின் பலனுன கர்ம நாசத்தையும் கூறுகிருர் :—

शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरोः
नित्यं ब्रह्म निरन्तरं विमृशतां निर्व्याजशान्तात्मनाम् ।
भूतं भावि च दुष्कृतं प्रदहतां संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥ ३ ॥

*ஶச்வந்நச்வரமேவ விச்வமகிலம் நிச்சித்ய வாசா குரோ:*
*நித்யம் ப்ரஹ்ம நிரந்தரம் விம்ருஶதாம் நிர்வ்யாஜ ஶாந்தாத்மநாம் ।*
*பூதம் பாவி ச துஷ்க்ருதம் ப்ரதஹதாம் ஸம்விந்மயே பாவகே*
*ப்ராரப்தாய ஸமர்பிதம் ஸ்வவபுரித்யேஷா மநீஷா மம ॥*

**अखिलं विश्वं**-உலகம் எல்லாம், **शश्वत्**-அடிக்கடி, **नश्वरमेव**-அழியக்கூடியதுதான் (என்பதை) **गुरोः वाचा**—குருவின் உபதேசத்தால், **निश्चित्य**-தீர்மானித்து, **नित्यं**-அழிவற்றதான, **ब्रह्म**-ப்ரஹ்மத்தை, **निरन्तरं**-இடைவிடாமல், **विमृशतां**-தியானிப்பவர்களும், **निर्व्याजशान्तात्मनां**-கபடமில்லாத அடங்கிய மனம் உள்ளவர்களும், **भूतं**-ஸஞ்சிதமாயும், **भावि च**-ஆகாமியாயுமுள்ள, **दुष्कृतं**-பாபத்தை, **संविन्मये**-ஞானமயமான, **पावके**-அக்னியில், **प्रदहतां**-பொசுக்குகின்றவர்களுமான ஞானிகளுடைய, **स्ववपुः** - தன் சரீரம், **प्रारब्धाय**— பிராரப்தானுபவத்திற்காக, **समर्पितं** — கொடுக்கப்பட்டதாக ஆகிறது **इति**—என்ற, **एषा**—இது, **मम**—என்னுடைய, **मनीषा**-அபிப்பிராயம்.

ஸ்ரீ ஸத்குருவினிடம் உபநிஷத் வாக்யார்த்தத்தை விசாரம் செய்து குருவினுடைய உபதேசத்தால் ப்ரஹ்மத்தைத் தவிற மற்றவை எல்லாம் அழியக்கூடியது. உத்பத்தியுள்ளது. ப்ரஹ்மம் ஒன்றுதான் அழியாதது, உத்பத்தி இல்லாதது என்பதைத் தீர்மானித்துக்கொள்ள வேண்டும். இதுமட்டும் அல்ல. பிரபஞ்சம் பொய், ப்ரஹ்மம் ஸத்யம் என்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த ப்ரஹ்ம ஸ்வரூபத்தை உபநிஷத்தில் கூறியுள்ளபடி நானே ப்ரஹ்மம் என்று இடைவிடாமல் தியானம் செய்யவேண்டும்.

இதைத்தான் பகவத்பாதாள் ப்ரஹ்மானுசிந்தனத்தில் **ब्रह्मैवाहं न संसारी मुक्तोहमिति भावयेत्** (ப்ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ முக்தோஹமிதி பாவயேத்) என்று கூறியுள்ளார்.

இந்த ப்ரஹ்ம பாவனை உறுதிப்படுவதற்கு உபாயம் கூறுகிறார் — 'நிர்வ்யாஜ ஶாந்தாத்மனும்' என்று. ஒன்று வாஸனாக்ஷயம், மற்றொன்று மனோநாசம். அநேக ஜன்மாக்களில் உள்ள பழக்கத்தால் டம்பம், கர்வம் முதலான அசுப வாஸனைகள் மனதில் ஏறியிருக்கின்றன. இந்த வாஸனை மனதில் இருப்பதால்தான் நமக்கு திடீரென்று கோபம், கர்வம், டம்பம் முதலானவை ஏற்படுகின்றன. இந்த வாஸனை ஒழிந்தால்தான் ப்ரஹ்மபாவனை நிலைக்கும். இந்த வாஸனையை ஒழிப்பது எப்படி? விவேகத்தால் சுப வாஸனை மனதில் திடப்படவேண்டும். அப்பொழுது டம்பம் முதலியவை ஏற்படாது. அடுத்தது மனோநாசம். தீபத்தில் ஜ்வாலை தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்று இடைவிடாமல் இருப்பதுபோல் அந்தக்கரணத்திலும் ஒன்றன்பின் ஒன்றாக ஏதாவது விருத்திகள் (எண்ணங்கள்) ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. ஏதாவது ஒரு விஷயத்தை எண்ணிக் கொண்டிருப்பதால்தான் அந்தக்கரணத்திற்கு மனம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த எண்ணங்கள் அடிக்கடி ஏற்படுவதால்தான் வாசனை உறுதிப்படுகிறது. வாஸனை உறுதிப்பட்டால் மேலும் மேலும் எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். ஆகையால் மனதில் விருத்திகள் ஏற்படாதபடி நிக்ரஹம் செய்யவேண்டும். விருத்திகள் ஏற்படாமல் மனம் அடங்குவதுதான் இங்கு மனோநாசம் என்று கூறப்படுகிறது. இதனால் வாஸனைக்கும் பலம் குறைந்து அழிந்துவிடும். வாஸனாக்ஷயமும் விருத்தி நாசமும் ஏற்பட ஏற்பட ப்ரஹ்மபாவனை ஸ்திரப்படும். ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும்.

இவ்வாறு தத்வஞானத்தின் ஸாதனங்களைக் கூறிவிட்டு ஞானத்தின் பலனைக் கூறுகிறார். முன்னால் பல பிறவிகளிலும்,

இந்த ஜன்மாவில் ஞானம் ஏற்படுவதற்கு முன்பும் செய்யப் பட்ட கர்மாக்கள், இதுவரையில் பலனைக் கொடுக்காதவை ஸஞ்சிதம் எனப்படும். ஞானம் ஏற்பட்டபின் அவன் சரீரம் செய்யும் கர்மாவுக்கு ஆகாமி என்றுபெயர். இந்த இருவித கர்மாக்களும் ஞானத்தால் அழிந்துபோய் விடுகின்றன. ஸஞ்சித கர்மாக்களின் மத்தியில் ஞானம் ஏற்பட்ட இந்த சரீரத்தைக்கொடுத்து பலனைக்கொடுத்துக் கொண்டிருக்கும் கர்மாவிற்கு 'ப்ராரப்தம்' என்று பெயர். அதுமட்டும் அனு பவித்தபின் நீங்கிவிடுகிறது.

ஸந்தேஹம்:—கர்மபலனை அனுபவிக்காதவரையில் கர்மா நிவிருத்தி யாகாது என்று ஸ்மிருதிகள் கூறும்பொழுது ஞானிக்குமட்டும் பலனை அனுபவிக்காமலேயே கர்மா நிவிருத்தியாவது எப்படி?

ஸமாதானம்:— கர்மாக்களைச் செய்தவனிடம் தான் அவை பலனைக் கொடுக்குமே தவிற செய்யாதவனிடம் கொடுக்காது. நான் செய்கிறேன் என்ற எண்ணத்துடன் செய்தால்தான் கர்த்தாவாகிறான். இதற்கு சரீராபிமானம் வேண்டும். ஞானியோ தன்னை ப்ரஹ்ம ஸ்வரூபமாக பாவிக் கிறான். சரீராபிமானம் அவனுக்கு இல்லை. நான் செய் கிறேன் என்றோ, செய்தேன் என்றோ, செய்யப்போகிறேன் என்றோ ஞானி எண்ணுவதில்லை. ஆகையால் அந்த சரீரம் கர்மாக்களைச்செய்தாலும் அவன் கர்த்தாவல்ல. மேலும் சரீரம் மூலம் ஸுகதுக்கானுபவங்களை மனத்தில் உண்டு பண்ணித்தான் கர்மா பலனைக்கொடுக்கவேண்டும். சரீராபி மானம் இல்லாத ஞானியிடம் எப்படி பலனைக் கொடுக்க முடியும்? ஆகவே அவை நீங்கிவிடுகின்றன. பாபகர்மா ஞானியிடம் ஒட்டுவதில்லை என்றும், ஞானம் என்ற நெருப்பு எல்லா கர்மாக்களையும் பொசுக்கிவிடுகிறது என்றும் கீதாசார்யர் கூறுகிறார். ஞானிக்கு பாபம் போலவே புண்யமும் ஆத்மானந்தானுபவத்திற்கு இடைஞ்சலான படியால் அதையும் பாபம் என்ற சொல்லால் குறிக்கிறார். புண்யம், பாபம் எல்லாம் நீங்கிவிடுகின்றன.

ஸந்தே :—அப்படியானுல் ஞானம் வந்தவுடன் ஸஞ்சித கர்மாவைப்போல ப்ராரப்த கர்மாவும் அழிந்துவிடுமே. அது மட்டும் எப்படி மிஞ்சி நிற்கமுடியும்?

ஸமா :— ஸஞ்சிதகர்மா இதுவரை பலனைக் கொடுக்க ஆரம்பிக்கவில்லை. அதனுல் ஞானம் வந்தவுடன் அது நீங்கிவிடுகிறது. பிராரப்த கர்மாவோ பலனைக்கொடுக்க ஆரம்பித்துவிட்டது. அதை நடுவில் நிறுத்தமுடியாது. குயவன் பானை செய்யும்பொழுது கம்பை எடுத்துவிட்டாலும் கூட வேகம் உள்ளவரை சுழன்றுதான் சக்கரம் நிற்கிறது. அம்புறாத்தூணியில் உள்ள பாணங்களை வெளியில் எடுத்து விடவோ அல்லது உள்ளே வைக்கவோ மனிதனுக்கு சக்தி உண்டு. ஆனுல் வில்லில் தொடுத்து வெளியில் விட்டு விட்டால் பிறகு அதை நிறுத்தமுடியாது. வேகம் உள்ள வரை சென்றுதான் கீழே விழும். அதுபோல் ஆரம்பித்த பிராரப்த கர்மா முழுவதும் அனுபவத்தைக்கொடுத்த பின் தான் நீங்கும். ஆனுல் நம் அனுபவத்திற்கும் ஞானியின் அனுபவத்திற்கும் வித்யாஸம் உண்டு. இதைத்தான் காட்டுகிருர் — 'பிராரப்த அனுபவத்திற்காக சரீரத்தைக் கொடுத்துவிடுகிருன்' என்று. ப்ரஹ்மானுபவத்தில் ஞானி மூழ்கி இருப்பதால், உலக விஷயத்தில் அவனுக்கு கொஞ்சமும் ஸம்பந்தம் இருக்காது. உலகத்தாருக்கு அவன் அநுபவிப்பதுபோல் தோன்றும். பிராரப்த கர்மா நீங்கியதும் அவன் அகண்ட ஸச்சிதானந்த ப்ரஹ்மமாக ஆகிருன். (3)

(அ) ஜீவன் ஞானத்தால் ப்ரஹ்மத்தை அடைகிருன் என்று சொல்லலாமே தவிற ப்ரஹ்மமாகவே ஆகிருன் என்பது எப்படிப் பொருந்தும்? நான் பருத்தவன், நான் இளைத்தவன், நான் குருடு, நான் செவிடு, என்று தேஹம் முதலியவைகளைத்தான் நாம் ஆத்மாவாக அனுபவிக்கிருேம். இதைத் தவிற வேருன ஆத்மா இருப்பதாகத் தெரியவில்லை. ப்ரஹ்மமோ சுத்தமான ஸ்வயம்ப்ரகாச வஸ்து. தேஹாதி

ரூபமான ஜீவன் எவ்வாறு சுத்த ப்ரஹ்மமாக ஆகமுடியும் என்ற கேள்விக்கு பதில் கூறுகிருர் :—

या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः ।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावयन्
योगी निर्वृतमानसः स गुरुरित्येषा मनीषा मम ॥ ४ ॥

யா திர்யங்நரதேவதாபிரஹமித்யந்தஃ ஸ்புடா க்ருஹ்யதே
யத்பாஸா ஹ்ருதயாக்ஷதேஹவிஷயா பாந்தி ஸ்வதோऽசேதநாஃ ।
தாம் பாஸ்யைஃ பிஹிதார்கமண்டலநிபாம் ஸ்பூர்திம் ஸதா பாவயன்
யோகீ நிர்வ்ருதமாநஸஃ ஸ குருரித்யேஷா மநீஷா மம ॥

या-எந்த சைதன்யம், तिर्यङ्नरदेवताभिः – மிருகம், மனிதன், தேவர் இவர்களால், अहं-நான், इति-என்று, अन्तः-உள்ளே, स्फुटा-நன்ருக, गृह्यते-உணரப்படுகிறதோ. यद्भासा-எதன் பிரகாசத்தால், स्वतोऽचेतनाः-ஸ்வயம் ஜடமான, हृदयाक्षदेहविषयाः-மனம், இந்திரியம், தேஹம், விஷயம் இவைகள், भान्ति-விளங்குகின்றனவோ. भास्यैः-பிரகாசிக்கப்படும் மேகங்களால், पिहितार्कमण्डलनिभां-மறைக்கப்பட்ட சூரியமண்டலத்திற்கொப்பான, तां-அந்த, स्फूर्तिं-பிரகாச வஸ்துவை, सदा-எப்பொழுதும், भावयन्-தியானம் செய்துகொண்டு, योगी-மனதை அடக்கிய ஞானி, निर्वृतमानसः-மனத்தில் ப்ரஹ்மாநந்தம் நிறைந்தவனுக ஆகிருன். सः-அவன், गुरुः-பெரியவன், इति एषा-என்ற இது, मम-என்னுடைய, मनीषा-அபிப்பிராயம்.

ஸந் :— நான் என்று கூறப்படுவதுதான் ஆத்மா, எல்லாரும் தேஹாதிகளைத்தான் நான் என்று சொல்லுகிருேம். தேஹாதிரூபமான ஆத்மா எப்படி ப்ரஹ்மம் ஆக முடியும் ?

ஸமா :—தேஹாதிகளையும் சேர்த்து சில சமயம் 'நான்' என்று கூறுவது உண்மைதான். ஆனால் சில சமயம் 'இது என் வீடு' என்பதுபோல் 'இது என் தேஹம்' 'இது என்னுடைய கண்' 'இது என் பிராணன்' 'இது என் மனஸ்' என்றும் அனுபவம் ஏற்படுகிறது. நான் என்று கூறப்படுவது ஆத்மா; இது என்று கூறப்படுவது அனாத்மா. தேஹம், இந்திரியம், மனம், பிராணன் இவைகள் 'இது' என்ற அனுபவத்திற்கு விஷயமாவதால் அவை ஆத்மா அல்ல, அனாத்மாதான். 'இது என் மனம்' என்று கூறும் பொழுது நான் என்று குறிக்கப்படும் ஆத்மா மனதைக் காட்டிலும் வேறானது என்பது அநுபவத்தால் தெரியவருகிறது. ஆத்மா ஒரு சமயமும் இது என்று குறிக்கப்படுவது இல்லை. மனிதன், மிருகம், தேவதை முதலான எல்லா பிராணிகளாலும் நான் என்றே ஆத்மா குறிக்கப்படுகிறது. இந்த அனுபவத்திலிருந்து ஆத்மா தேஹாதிவிலக்ஷணம் என்று தெரியவருகிறது.

மேலும் மனம், இந்திரியம், தேஹம், சப்தம் முதலான விஷயங்கள் எல்லாம் இயற்கையில் ஜடப்பொருள்கள். தானாக பிரகாசிக்கும் சக்தி அவைகளுக்குக் கிடையாது. நான் என்று கூறப்படும் ஸ்வப்ரகாசமான ஆத்மாவால்தான் அவை பிரகாசிக்கின்றன. நான் என்ற அநுபவம் ஏற்பட மற்றோர் பிரகாசத்தின் உதவி தேவை இல்லை. அது தானாகவேதான் பிரகாசிக்கிறது. ஆகவே பிரகாசிக்கப்படுகின்ற தேஹாதிகளைக்காட்டிலும் ஸ்வயம் பிரகாசமான ஆத்மா வேறாகத்தான் இருக்கவேண்டும்.

ஸந் :—'நான்' என்று எல்லோராலும் ஆத்மா உள்ளே அனுபவிக்கப்படுமானால், ஆத்மானுபவம் இருக்கிறபடியால் எல்லா பிராணிகளும் பிரயத்னம் இல்லாமலேயே மோக்ஷத்தை அடைந்திருக்கலாமே.

ஸமா :—தேஹாதிகளுடன் சேர்ந்து 'நான்' என்று ஸாமான்யமாக ஆத்மாவைத்தெரிந்து கொள்வதால் மட்டும்

மோக்ஷம் ஏற்படாது. ஒன்றிலும் ஸம்பந்தப்படாமல் தேஹாதி விலக்ஷணமாக ஸச்சிதானந்த ஸ்வரூபமாக ஆத்மாவைத் தெரிந்துகொண்டால்தான் மோக்ஷம் ஏற்படும். ஆத்மசைதன்யத்தால் பிரகாசிக்கப்படும் தேஹேந்திரியாதிகள் தான் ஆத்மஸ்வரூபத்தை மறைக்கின்றன. இந்த மறைவை நீக்கவேண்டும். ஆகாயத்தில் சூரிய மண்டலத்தை மேகம் மறைக்கிறது. மேகம் இருப்பதை சூரியபிரகாசத்தால்தான் தெரிந்துகொள்கிறோம். சூரியனால் பிரகாசிக்கப்படும் மேகம் அவன் ஒளியை நன்கு தெரியவொட்டாமல் மறைத்து விடுகிறது. ஆனாலும் சூரியன் இருப்பதை நாம் தெரிந்துகொண்டுவிடுகிறோம். இதுபோல ஆத்மாவை ஸாமான்யமாகத் தெரிந்துகொண்டாலும் ஆத்மாவால் பிரகாசிக்கப்படும் அக்ஞானத்தால் மறைக்கப் பட்டு ஸச்சிதானந்த ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள வில்லை. இந்த அக்ஞானம் விலக முயற்சிக்கவேண்டும். அஸங்க ஸச்சிதானந்த ஆத்மாவே நான், தேஹாதிகள் அல்ல என்று எப்பொழுதும் பாவனை செய்யவேண்டும். மனதில் ப்ரஹ்மாகார விருத்தியைத்தவிற வேறு ஒரு விருத்தியும் ஏற்படக்கூடாது. இதுதான் ஸம்ப்ரக்ஞாத ஸமாதி என்பது. மனதில் வேறு விருத்திகள் வரவொட்டாதபடி தடுத்துவிட்டபடியால் இவன் யோகி ஆகிறான். மனோ விருத்தியை அடக்குதல் யோகம், அல்லது ஜீவ ப்ரஹ்மைக்ய ஞானமே யோகம். இதை உடையவன் ஆனதால் இவனை யோகி என்று கூறலாம்.

இவ்வாறு மனதில் ஒருவித எண்ணமும் ஏற்படாதபடி அடக்கி ஜீவப்ரஹ்மைக்யத்தை அறிந்து அதையே இடைவிடாமல் எப்பொழுதும் தியானம் செய்பவன் நிர்வ்ருதி என்ற ப்ரஹ்மானந்தத்தை அநுபவிப்பான். அவன் யாராயிருந்தாலும் குரு என்பது தீர்மானம். (4)

(அ) ஆத்மா பரமானந்த ஸ்வரூபம் என்பதைக் காட்டி அஸம்ப்ரக்ஞாத ஸமாதியைக் குறிப்பிடுகிறார் :—

यत्सौख्याम्बुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृताः
यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।
यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मवित्
यः कश्चित् स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम ॥

யத்ஸௌக்யாம்புதிலேஶலேஶத இமே ஶக்ராதயோ நிர்வ்ருதா:
யச்சித்தே நிதராம் ப்ரஶாந்தகலனே லப்த்வா முநிர் நிர்வ்ருத: ।
யஸ்மிந்நித்யஸுகாம்புதௌ களிததீர் ப்ரஹ்மைவ ந ப்ரஹ்மவித்
ய: கச்சித் ஸ ஸுரேந்த்ரவந்திதபதோ நூநம் மநீஷா மம ॥

**यत्सौख्याम्बुधिलेशलेशतः**—எந்த ஆத்மானந்தம் என்ற கடலிலுள்ள சிறிய திவிலையினுடைய திவிலையினால் **इमे** – இந்த **शक्रादयः** – இந்திரன் முதலியவர்கள் **निर्वृताः** – ஸுகிகளாக இருக்கின்றனரோ, **यत्** – எந்த ஸ்வரூப ஸுகத்தை **प्रशान्तकलने** – விருத்திகள் ஏற்படாமல் அடங்கிய **चित्ते** – மனதில் **लब्ध्वा** – அடைந்து **मुनिः** – முனிவர் **निर्वृतः** – ஆனந்தமாக இருக்கிறாரோ, **यस्मिन्** –எந்த **नित्यसुखाम्बुधौ**– அழிவற்ற ஆனந்தக் கடலில் **गलितधीः** – மனம் கரைந்தவன் **ब्रह्मैव** – ப்ரஹ்மமே **न ब्रह्मवित्** – ப்ரஹ்மத்தை அறிந்தவன் அல்ல **सः** – அவன் **यः कश्चित्** – யாராயிருந்தாலும், **सुरेन्द्रवन्दितपदः** – தேவேந்திரனால் பூஜிக்கப்பட்ட பாதங்களை உடையவன். (இது) **मम** – என்னுடைய **मनीषा** – அபிப்பிராயம் **नूनम्** – நிச்சயம்.

உலகில் எல்லோருக்கும் ஆத்மாவினிடம் நிரதிசயமான ப்ரீதி இருக்கிறது. இந்த ப்ரீதிக்குக் காரணம் ஆத்மா ஆனந்தரூபமாக இருப்பதுதான். ஆனந்தத்தைத் தானே எல்லோரும் அடையவிரும்புகிறார்கள். ஆத்மாவை ஒட்டித் தான் மற்றவைகளிலும் ப்ரியம் ஏற்படுகிறது. ஆத்மானந்தம் என்பது ஓர் பெரிய ஸமுத்திரத்திற்கொப்பானது.

தேவேந்திரன், ப்ரஹ்மா இவர்களின் ஆனந்தத்தை மிகவும் உயர்ந்ததாகச் சொல்வார்கள். ஆனால் அந்த ஆனந்தமும் ப்ரஹ்மானந்த ஸமுத்திரத்திலிருந்து கிளம்பிய ஓர் சிறிய திவிலேக்கும் திவிலையாக உள்ளது. இதிலிருந்து ப்ரஹ்மானந்தத்தின் சிறப்பைத் தெரிந்துகொள்ளலாம்.

மனதில் விருத்திகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் வரை இந்த ஆத்மாநந்தத்தை அநுபவிக்க முடியாது. விருத்திகள் ஏற்படாமல் தடுத்து மனதைஅடக்கினால்தான் ஆத்மாநந்தம் பிரகாசிக்கும். அப்பொழுது அவன் ஆனந்தமாக இருப்பான். இதுதான் அஸம்ப்ரக்ஞாத ஸமாதி என்பது. வேறு விருத்திகள் ஏற்படாமல் ப்ரஹ்மாகார விருத்தியே இடைவிடாமல் ஏற்படும் ஸம்ப்ரக்ஞாத ஸமாதி முன் சுலோகத்தில் கூறப்பட்டது. விருத்திகளே இல்லாத நிலை அஸம்ப்ரக்ஞாத ஸமாதி. இந்நிலையில் ப்ரஹ்மானந்தக் கடலில் மனம் கரைந்துவிடும். அப்பொழுது அவன் ப்ரஹ்மவித் என்ற நிலையையும் தாண்டி ப்ரஹ்மமாகவே இருப்பான். ப்ரஹ்மவித் என்ற நிலையில் அறிபவன், அறியப்படும் ப்ரஹ்மம், அறிவு என்ற பேதம் தோன்றலாம். அஸம்ப்ரக்ஞாத ஸமாதியில் இந்த த்ரிபுடியும் மறைந்துபோகும். அப்பொழுது அவன் ப்ரஹ்ம ஸ்வரூபம்தான்.

ஸந் :— முக்தி அடைந்தவனுக்கு ஸுகானுபவம் உண்டா இல்லையா ? இருக்குமானால், ஸுகம் என்பதுதான் ப்ரஹ்மம், அதை இவன் அறிகிறான், ஆகவே இவனை ப்ரஹ்மவித் என்று சொல்லலாம். ப்ரஹ்மவித்து இல்லை என்று முன்னால் கூறியது தப்பு. முக்தியில் ஸுகாநுபவம் இல்லையாகில் ஸம்ஸார நிலைக்கும் மோக்ஷத்திற்கும்வித்யாஸம் இல்லை.

ஸமா :—நித்யநிரதிசய ஆனந்தானுபவம்தான் மோக்ஷம். ஆனந்தம் ஸ்வஸ்வரூபமே தவிர வேறு அல்ல. மற்ற விஷயங்களை அந்தக்கரணவிருத்தியைக் கொண்டு

அனுபவிக்கிரேம். அந்தக்கரண விருத்தியால்தான் முதலில் ப்ரஹ்மத்தை அறிகிருன். அப்பொழுது ப்ரஹ்மவித் என்று சொல்லலாம். அக்ஞானம், மனோவிருத்தி எல்லாம் நீங்கி பேதம் தோன்ருமல் ஆனந்தானுபவ ஸ்வரூபமாக உள்ள நிலையில் அவனை ப்ரஹ்மவித் என்று சொல்லமுடியாது. அவன் ப்ரஹ்மமேதான். இப்பேறுபட்ட ஜீவன் முக்தனின் பாதாரவிந்தங்களை த்ரிலோகாதிபதியான தேவேந்திரன் முதலானோரும் பூஜிக்கின்றனர். நாமும் அவரைத் தேடிக் கண்டுபிடித்து ஆராதித்தோமானல் எல்லாவித சிரேயஸ்ஸுகளையும் அடையலாம்.

இவ்வாறு தத்வ ஸாக்ஷாத்காரம் அடைந்து ப்ரஹ்மானந்தானுபவத்துடன் விளங்கும் ஞானியின் மனோநிலையை ஐந்து சுலோகங்களால் விளக்கிக் காட்டுவதன்மூலம் ஸ்ரீ பகவத்பாதாள் தன் அனுபவத்தையே வெளிப்படுத்தி விட்டார்.

மனீஷாபஞ்சகம் முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥

